"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



MF-18 TAM

மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் மஃபத்லால் ஃபைன்

**A million functions**

Chips – or to use the technical term for them: solid state components – form the brain of the no[illegible] sophisticated micro-processors, which in their turn act as the control and operational centre of the micro-computer. The new technology first appeared on the market in 1975. Soon up to a million electrical functions will be combined in the [illegible]; a thousand of these in an electronic bundle of millimetre size have almost the same storage capacity as the human brain. But the micro-processors can process data more quickly and perform many tasks better than a human being.

# வேலை கொல்லி!

பூச்சி கொல்லி மாதிரி வேலை கொல்லி எனக் கருதப்படுகிறது ''சிப்'' (படம்). ''சிப்'' என்பது வாமன அவதாரம் எடுத்த கம்ப்யூட்டரின் பகுதி. செங்கல் அடுக்கிக் கட்டிடம் எழுப்புவது போல் சிப்களைப் பயன் படுத்தி கம்ப்யூட்டர்கள் தயாரிக்கின்றனர். செலவும் மிகக்குறைவு.

அலமாரி உயர கம்ப்யூட்டர்கள் இருந்த போதே வேலை இல்லாத் திண்டாட்டம் பெருகும் என்ற பயம் இருந்த தெனில் மினி கம்ப்யூட்டர்கள் வந்த பிறகு கிலி பிடித்துக் கொண்டிருக்கிறது.

மேற்கு ஜெர்மனியிலேயே பெரும்பாலான மக்கள் தங்கள் எதிர்காலம் பற்றிக் கவலை கொண்டிருக்கின்றனர். இயந்திர மயமான காரியாலயங்களில் இனி மனித நடமாட்டமே இராது என்று அஞ்சுகின்றனர்.

காபராவை அதிகப் படுத்த, ''இந்தப் புதிய சாதனம் மூன்று ஊழியர்களின் வேலையைச் செய்துவிடும்'' என்று மினி கம்ப்யூட்டர்கள் விளம்பரப் படுத்தப் படுகின்றன. மெய்யாலுமே மனித மூளையை விடச் சிறப்பாகச் செயல்படுகிறவைதாம்.

கம்ப்யூட்டர் புக முடியாத துறை, கை வினைஞர்கள் தொழில்தான். ஆபரணங்கள் தயாரிப்பு, சங்கீத வாத்தியங்கள் தயாரிப்பு போன்றவை. இத்தகைய கலைத்துறைகளில் ஈடுபடாதவர்கள் எலெக்ட்ரானிக்ஸ் துறையிலேயே பயிற்சி பெற்று கம்ப்யூட்டர் ஸ்பெஷலிஸ்டுகளாகிறார்கள்.

ஆயினும் பிரச்னை என்னவோ பயமுறுத்தத்தான் செய்கிறது.

நன்றி : ஸ்காலா

# விந்தை மிகு வண்ணங்களில்
# சிந்தை மிகு சேமிப்பு
## பி.ஓ.பியின் ரொக்கப்பத்திரங்கள்




உங்கள் எதிர்கால எண்ணங்களை எளிமையமாக்க பிஓபியின் ரொக்கப் பத்திரங்களை வாங்கிடுவீர். குறைந்த தொகையை முதலீடு செய்து நிறைந்த தொகையைப் பெறுங்கள். ரூ. 500 பெருமானமுள்ள ரொக்கப்பத்திரத்தைப் பெற நீங்கள் முதலீடு செய்ய வேண்டியது ரூ.186 மட்டுமே.

பிஓபியின் ரொக்கப் பத்திரங்கள் கீழ்க்கண்ட தொகைகளில் கிடைக்கின்றன. ரூ. 500, ரூ.1000, ரூ. 5000, ரூ.10000, ரூ. 50000, ரூ.100000, விபரங்கட்கு அருகாமையிலுள்ள எங்களின் கிளையினை அணுகுங்கள்.



**பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்.**
(பதிவு அலுவலகம்: 'ஆக்ஸ்போர்ட் ஹவுஸ்'
மவுண்ட் ரோடு, சென்னை - 600 006)

CSI பில்டிங், கதீட்ரல் சாலை, சென்னை-600 086 ● 180, தம்பு செட்டி தெரு, சென்னை-600 001 ● 41, கிழக்கு மாட வீதி, மைலாப்பூர், சென்னை-600 004 ● 21, மாட்லி சாலை, தி.நகர், சென்னை-600 017 ● 83, பிளாட் எண் 4035, V வது பிளாக், IV வது மெயின் ரோடு, அண்ணாநகர், சென்னை-600 040 ● 209, திவான் பகதூர் சாலை, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர்-641 002 ● 1, பேர்ட்ஸ் சாலை, கன்டோன்மெண்ட், திருச்சிராப்பள்ளி-620 001 ● 73, மேற்கு ஆவணி மூல வீதி, மதுரை-625 001 ● 42, அருணாசல ஆசாரி தெரு, சேலம்-636 001

EP.BOB.102-81.TAM.d



அமெரிக்க டென்னிஸ் சாம்பியன்ஷிப் கோப்பையுடன் மாக்கன்ரோ.

# விம்பிள்டன் —
# டென்னிஸ் கிருஷ்ணனுடன் பேட்டி

**1. விம்பிள்டன் பந்தயங்கள் எத்தனை ஆண்டுகளாக நடக்கின்றன?**

வருஷக் கணக்கெடுத்தால் 104வது வருஷம். ஆனால் இடையில் 1915-18 ஆண்டுகளில் முதல் உலக மகா யுத்தத்தின்போதும் 1942-45 ஆண்டுகளில் இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போதும் விம்பிள்டன் போட்டிகள் நடைபெறவில்லை. 1977ம் வருஷம் விம்பிள்டனுக்கு நூற்றாண்டு கொண்டாடப்பட்டது. நான் அதற்குப் போய்க் கலந்து கொண்டிருக்கிறேன்.

**2. விம்பிள்டன் கோப்பை சுழல் கோப்பையா? ஒரே கோப்பை கை மாறிக்கொண்டே போகிறதா? அல்லது ஒவ்வொரு ஆண்டும் வேறு வேறு கோப்பை தரப்படுகிறதா?**

ஒரே கோப்பைதான் கை மாறிக் கொண்டே இருக்கும். ஒவ்வொரு வருஷ வெற்றியாளர் பெயரும் அந்தச் சுழல் கோப்பையில் பொறிக்கப்படும்!

**3. அது பொன்னா? வெள்ளியா? அதன் மதிப்பு என்ன?**

வெள்ளி. அதற்கு மதிப்பே பார்க்க வேண்டாம்! விம்பிள்டன் வெற்றியாளர் மதிப்பு வெள்ளியின் எடையிலோ அதை மதிப்பீடு செய்வதிலோவா இருக்கிறது? ஈடு இணையற்ற சாதனைக்குக் கிடைக்கும் கௌரவம் அல்லவா அது!

திரு கிருஷ்ணன் ○

**4. கோப்பை தவிர இறுதி வெற்றி பெற்றவருக்குப் பணம் கிடைக்கிறதா? எவ்வளவு?**

சுமார் மூன்று லட்சத்து எண்பத்தேழாயிரம் ரூபாய்.

நான் விளையாடிய காலத்தில் இந்தப் பரிசுப் பணம் கிடையாது. 'செலவுக்கு மட்டும் 300 பவுண்ட் கொடுத்தார்கள். செமி ஃபைனல் வரை வந்த எனக்கு வெண்கலப் பதக்கம் தந்தார்கள்.

1968ம் வருஷத்திலிருந்து விம்பிள்டன் புரொபஷனல் ஆட்டக்காரர்களும் அமெச்சூர்களும் கலந்துகொள்ளும் ஆட்டமான போது பரிசுப் பணமும் கொடுப்பது தொடங்கியது. விம்பிள்டனில் முதல் ரவுண்ட் வந்து ஆடினாலே 4500 ரூபாய் கிடைக்கும்

**5. இறுதி வெற்றி பெற்றவரின் எதிராளிக்கு என்ன கிடைக்கும்? போர்க் ஏதோ ஒரு சிறு பேட்டியை உயர்த்திக் காட்டினாரே, அதில் என்ன இருந்தது? அதன் மதிப்பென்ன?**

போர்க்குக்குக் கிடைத்தது 'ரன்னர் அப்' வெள்ளிப் பதக்கம். விலை மதிப்பற்ற செல்வம்! அவர் Sporting gestureல் அதை ரசிகர்களுக்கு உயர்த்திக் காட்டிப் பெருமை யுற்றிருக்கலாம்.

**6. மேற்படி பரிசு தவிர போர்க்குக்கு இந்த ஆண்டு எவ்வளவு பணம் கிடைத்திருக்கும்?**



ரன்னர் அப்புக்குக் கிடைப்பது சுமார் ஒரு லட்சத்துத் தொண்ணூற்றி நாலாயிரம் ரூபாய்.

**7. குவார்ட்டர் பைனல் வரை வந்த விஜய் அமிர்தராஜுக்கு எவ்வளவு பணம் கிடைத்திருக்கும்?**

சுமார் ஐம்பத்து நாலாயிரம் ரூபாய்.

**8. இந்தப் பணத்தையெல்லாம் தருவது யார்? அறக்கட்டளையா? அதனை நிறுவியவர் யார்?**

"Association of Tennis Professionals" என்று அமெரிக்காவில் உள்ள டல்லஸில் ஒரு தலைமைக் காரியாலயம் இயங்குகிறது. விளையாட்டுக்காரர்களின் பரிசுப் பணம், விளையாட்டுக்காரர்களின் நலன் ஆகியவற்றுக்குப் பொறுப்பு ஏற்றுக் கொள்கிறது. முன்பு சர்வதேச லான் டென்னிஸ் ஃபெடரேஷன் எனும் டென்னிஸ் நிர்வாகிகள் கையிலிருந்த அதிகாரத்தில் பெரும் பகுதியை இப்போது ஆட்டக்காரர்கள் சங்கமே நிர்வகிக்கத் தொடங்கி விட்டது. எனவே சர்வதேச லான் டென்னிஸ் ஃபெடரேஷனில் பாதிப் பேரும், ஆட்டக்காரர்கள் சங்கத்தில் பாதிப் பேரும் அடங்கிய 'Pro Council' என்று ஏற்படுத்தி, அதுவே இன்றைய தினம் இந்தப் பரிசுப் பணம் முதலியவற்றை முடிவு செய்கிறது! விம்பிள்டன் போட்டிக்கு ஒவ்வொரு வருஷமும் மிகப் பெரிய கம்பெனிகள் 'Sponsorship' பெருமையை அடைகின்றன. இரண்டாண்டுகளுக்கு முன்பு கால்கேட் நிறுவனம் விம்பிள்டனை நிர்வகித்தது. இந்த வருஷம் 'Sponsorship' பெருமையை அடைந்த நிறுவனம் 'வால்வோ'!

**9. மற்ற எல்லா டென்னிஸ் போட்டிகளை விடவும் விம்பிள்டன் வெற்றி மிக உயர்ந்ததாகக் கருதப்படுவது ஏன்?**

முஸ்லிம்களுக்கு மெக்கா எப்படியோ அப்படி விம்பிள்டன், டென்னிஸ் வீரர்களுக்கு முக்கியம். விம்பிள்டன் நிர்வாகம் முதல் தரம்! அதன் பச்சைப் பசேலென்ற மைதானமோ ஏ கிளாஸ்! பூகோள ரீதியாக லண்டனும் அதற்கருகில் உள்ள விம்பிள்டனும் எல்லா நாடுகளுக்கும் நடு மத்தியில் நடுநாயகமாக விளங்குகிறது. டென்னிஸ் உலக சாம்பியன் போட்டி என்றாலே விம்பிள்டன் போட்டியைத்தான் குறிக்கும். உலக டென்னிஸ் அரங்கில் விம்பிள்டனின் கௌரவம் வாழையடி வாழையாக வளர்ந்து வந்திருக்கிற ஒன்று.



"என்னடா ரிசல்ட் என்னாச்சு?"
"ஹூம்....கணக்கிலேமட்டும் [illegible] பரவாயில்லே; இங்கிலீஷ், சயன்ஸ் இரண்டுலே தான் பெயில்."
- மகாதேவன்

**10. Mcenroe - சரியான உச்சரிப்பு என்ன?**

மாக்கன்ரோ!

**11. இந்த அமெரிக்கருக்கு என்ன வயது?**

இருபத்திரண்டு.

**12. இவருக்கு மனைவி, குழந்தைகள் அல்லது காதலி...?**

திருமணமாகவில்லை. காதலி உண்டு. ஸ்டேஸி மார்கோலின். டென்னிஸ் வீராங்கனை. சர்வதேசப் பெண்கள் டென்னிஸில் பதினெட்டாவது இடத்தைப் பெற்றிருப்பவர்.

**13. மாக்கன்ரோ ஆத்திரக்காரராய் இருப்பது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?**

அது அவரது பிறவிக் குணம். அதை மாற்ற முடியுமா? மாக்கன்ரோவின் அடாவடிச் செயல்கள், ஆட்டத்தினிடையே உதிர்க்கும் வசவு மொழிகள் உலகறிந்தவை. டென்னிஸ் பண்பாட்டுக்குரிய இடம் என்பதை மறப்பது ஆட்டக்காரர்களுக்கு உகந்ததல்ல.

**14. அவர் ஆத்திரப்படுவதில் நியாயம் உள்ளதா? நடுவர்கள் தவறு இழைக்கும் சந்தர்ப்பங்கள் அடிக்கடி நிகழ்கின்றனவா?**

சில சமயம் அவர் ஆத்திரப்படுவதில் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. ஒரு டெலிவிஷன் பேட்டியில் மாக்கன்ரோவின் பதிலையே எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

கேள்வி: ஏன் நீங்கள் மோசமாக நடந்துகொள்கிறீர்கள்?

பதில்: மோசமாக நடப்பது தவறு என்று நான் உணர்கிறேன். ஆட்டக்காரர்கள் மோசமாக நடந்து கொண்டாலோ மோசமாக ஆடினாலோ தோல்வி அல்லது கண்டனம் என்றும் தண்டனை கிடைத்து விடுகிறது. ஆனால் அம்பயர்கள் மோசமாகப் பல தவறுகளைச் செய்கிறார்களே, அவர்களுக்கு என்ன தண்டனை கிடைக்கிறது?

மாக்கன்ரோவின் இந்தப் பதில் கேள்வியில் நியாயம் இருக்கிறது. பல சமயம் அம்பயர்களின் சிறிய தவறுகள் ஆட்டத்தின் போக்கையே மாற்றி அமைத்து விடுகின்றன. அதனால் நடுவர்கள் விஷயத்தில் கோபப்படுவதில் அர்த்தம் இருப்பதாகவே நான் நினைக்கிறேன். நடுவர்களும் தங்கள் தவறுகளைத் திருத்திக்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். ஆட்டக்காரரும் மைதானப் பண்பாடு இழந்து நடக்கக் கூடாது. டென்னிஸ் விளையாட்டு மைதானம் பண்பாட்டின் விளைநிலமாக விளங்க வேண்டும்.

**15. வெற்றி பெற்றவர்களுக்கு விம்பிள்டன் நிர்வாகிகள் அளித்த விருந்தில் மாக்கன்ரோ கலந்து கொள்ளாதது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

விம்பிள்டன் பந்தயத்தின் 'க்ளைமாக்ஸ்' என்று கருதப்படுவது நிர்வாகிகள் அளிக்கும் விருந்து. பிரிட்டிஷ் மக்கள் பண்பாட்டுக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பவர்கள். அந்த வரவேற்பில் மாக்கன்ரோ கலந்துகொள்ளாதது வருத்தப்பட வேண்டிய விஷயம். இந்த விருந்தின் தொடக்கத்தில் விம்பிள்டன் வெற்றி வீரரும், வீராங்கனையும் கை

கோத்து நடனமாடி விருந்தினர்களை மகிழ்விப்பார்கள். தங்களுக்குப் பரிசு கொடுத்துக் கௌரவித்ததற்கு நன்றி நவில்வார்கள். இந்த முக்கியமான கட்டத்தைப் புறக்கணிப்பது அழகா?

16. மேற்படி விருந்துபசாரத்தின் போது மாக்கன்ரோ சார்பில் மன்னிப்புக் கேட்டதுடன் மாக்கன்ரோ பற்றிக் குத்தலாகவும் பேசிய ஜிம் எவர்ட்டின் பேச்சுப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? *

ஒரு ரசமான சண்டை தொடங்கியிருப்பதாக நினைக்கிறேன்.

17. ஐந்து ஆண்டுகளாக வெற்றி பெற்றுவந்த போர்க் இந்த ஆண்டு தோல்வியுற்றதற்கு அதி முக்கிய காரணம் ஒன்று என்ன என்று எண்ணுகிறீர்கள்?

போர்க் எப்போதுமே எதிர்ப்பை மடக்க வக் கிடைக்கும் ஆரம்ப வாய்ப்புக்களை நழுவ விடுவதில்லை. இந்த வருஷம் இறுதி ஆட்டத்தில் தவற விட்டு விட்டார். மாக்கன்ரோ மிக நன்றாக ஆடினார் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன்.

18. மாக்கன்ரோவின் வெற்றிக்கு அதி முக்கிய காரணம் எது என்று கருதுகிறீர்கள்?

அவருடைய சர்விஸ். உத்வேகப் போராட்டம். வெற்றி பெற வேண்டும் என்ற அகரப் பசி!

19. போர்க் விட்டுக் கொடுத்து விட்டார் என்று கூறப்படுமானால் அதை மறுப்பீர்களா? ஆதரிப்பீர்களா?

மறுப்பேன். போர்க் விட்டுக் கொடுக்கிற ஆசாமியே இல்லை!

20. விட்டுக் கொடுப்பது போன்ற தில்லுமுல்லுகள் விம்பிள்டனில் நடக்க வாய்ப்பு உண்டா?

இல்லவே இல்லை!

21. மாக்கன்ரோ கோபத்தை இறுதி ஆட்டத்தில் ரொம்பவும் சிரமப்பட்டுக் கட்டுப் படுத்திக் கொண்டார். இதனால் அவர் வெற்றி பெறுவது சுலபமாயிற்றா? அல்லது கஷ்டமாயிற்றா? உணர்ச்சிகளைக் கட்டுப் படுத்திக் கொள்ளும்போது 'டென்ஷன்' அதிகரிக்குமில்லையா? அப்போது ஆடுவது மேலும் சிரமமாயிருக்குமே?

ஒன்றிரண்டு தருணங்களில் அவரையும் மீறிக் கோபம் பீறிட்டது என்றாலும் மாக்கன்ரோ இறுதி ஆட்டத்தில் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டே ஆடினார். இதற்குக் காரணம் போர்க்கிடம் மாக்கன்ரோவுக்கு உள்ள அளவற்ற மரியாதை. ஆறு ஆண்டு கால அபார ஆட்டத்தினாலும் தமது ஒழுக்கக் கட்டுப்பாட்டினாலும் போர்க் மாக்கன்ரோவிடம் ஒரு பாதிப்பை விளைவித்திருந்தார்.

கோபத்தில் இரண்டு வகை உண்டு. ஒரு வகை கோபம் தற்கொலை போலத் தன்னைத் தானே அழித்துக் கொள்வது. மற்றொரு வகைக் கோபம் காரணமாக சூடேறச் சூடேற ஆட்டத்தில் மெருகு ஏறும். உத்வேகம் பிறக்கும். ஆட்டம் சராசரியை விடச் சிறக்கும். இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தவர் மாக்கன்ரோ!

22. ஆத்திரக்காரர் மாக்கன்ரோவுக்கு அவர் தகாத நடவடிக்கைகளுக்காக ஏராளமாக 'அபராதம்' போட்டு அவர் பரிசுப் பணத்திலிருந்து அது கழிக்கப்படுவது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ஏராளமாகச் சம்பாதிக்கும் ஒரு ஆட்டக்காரரை அபராதம் விதித்து நல்வழிப்படுத்த முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. லட்சக் கணக்கிலே சம்பாதிக்கிற இவருக்கு வரிப் பணம் கட்டுவதைப் போல அபராதம் செலுத்துவதும் சாதாரணமாகத்தான் இருக்கும். எனவே இது முக்கியமல்ல. பொது மக்களின் வெறுப்புக்கு உள்ளாகிறோமே என்ற மனத் துடிப்பு இயல்பாகவே ஏற்பட வேணும். மைதானப் பண்பாட்டைக் காக்க வேணும் என்ற எண்ணம் இயல்பாக வர வேணும். அபராதம் விதிப்பது தடிகொண்டு அடித்துப் பழத்தைப் பழுக்க வைத்த கதைதான்!

23. விம்பிள்டன் ரசிகர்கள் நடத்தைபற்றி என்ன கூறுவீர்கள்?

விம்பிள்டன் ரசிகர்கள் எனது இருபது வருஷ அனுபவத்தில் ரொம்ப அமைதியானவர்கள். இங்கிலீஷ்காரர்கள் அமைதிக்கு முதலிடம் தருபவர்கள். ஆனால் சமீபத்தில் விம்பிள்டன் போட்டிகளில் ரசிகர்களின் கூச்சல் அதிகமாகி வருவது எனக்கு வியப்பளிக்கிறது. விம்பிள்டன் போட்டிகளுக்கு இப்போது நிறைய வெளியூர்க்காரர்கள் வர ஆரம்பித்து விட்டார்கள். ஒருவேளை இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்.

24. விம்பிள்டன் இறுதி ஆட்டத்தை நாம் பார்க்க வழி செய்த இந்திய டீவி குறித்து...?

அற்புதமாகத் தங்கள் பணியை நிறைவேற்றினர். வளர்ந்து வரும் இந்திய டென்னிஸ் விளையாட்டுக்கு நல்லது செய்தார்கள். மேலும் அன்று டீ.வி. முன் அமர்ந்திருந்த பலருக்குப் புதிதாக டென்னிஸ் ஆடணும் என்ற ஆர்வம் பெருகியிருக்கும்.

25. போர்க், மாக்கன்ரோ ஆகியோரைச் சந்தித்துப் பேசியிருக்கிறீர்களா? ஏதாவது சுவையான அனுபவம்?

நான் ஸ்வீடனுக்கு ஆடச் சென்றிருந்தேன். பாஸ்டாட் என்ற இடத்தில் போர்க்கைச் சந்தித்து அளவளாவினேன். அவர் அப்பொழுது, 'நான் பத்து வயதிலே உங்க ஆட்டத்தை வந்து பார்த்து ரசித்திருக்கேன்!' என்று கூறி என்னைத் திகைக்க வைத்தார்.

மாக்கன்ரோவை எனக்கு நேரிடையாகத் தெரியாது. ஜெனரேஷன் காப்! அவருக்கு முந்திய தலைமுறையினரான லாவர், பிரேஸர், எமர்ஸன் இவர்களோடு ஆடி, பேசி, பயணமானது போல் இவரோடு நான் பழகச் சந்தர்ப்பமில்லை.

பேட்டி: **குண்டுமணி**

மேலட்டை வண்ணச் சித்திரம்: மணியம் செல்வன்

கிருஷ்ணன் படம்: சிக்கி

* "மாக்கன்ரோ சார்பிலும் நான் பேச வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ஆனால் மாக்கன்ரோவுக்குத் தெரிந்த பல "வார்த்தைகள்" எனக்குத் தெரியாதே!" என்றார் ஜிம் எவர்ட்.

"ஒரு சின்ன மாற்றத்தாலே வாழ்க்கையிலே பெரிய நஷ்டம்!"
"அடடா! என்ன அது!"
"லாட்டரிச் சீட்டு நம்பர் எஸ்.எஸ்.எல்.சி. ரிஸல்ட்லேயும் எஸ்.எஸ்.எல்.சி. நெம்பர் லாட்டரிச் சீட்டு முடிவிலேயும் வந்திருக்கு!"
- மகாதேவன்



# இளவரசரும் இளம் பிரதமரும்!



-செம்பியன்-

[இளவரசர் சார்லீஸ் — டயானா திருமண வைபவத்துக்கு ராஜீவ்—சோனியா போகப்போகிறார்கள், போகப் போவதில்லை, போகப் போகிறார்கள் என்று அடுத்தடுத்து செய்திகள். ஒரு வழியாக ராஜீவ் - சோனியா லண்டன் போய்ச் சேருகிறார்கள். சார்லஸைச் சந்திக்கிறார்கள்.]

சார்லஸ்: வாங்க வாங்க. எங்கே இந்த முடிசூடிய இளவரசர் திருமணத்துக்கு முடி சூடா மன்னராகிய நீங்க வராமலிருந்துவிடுவீங்களோன்னு பயந்துக்கிட்டிருந்தேன்!

ராஜீவ்: ஏன், நான் வருவது என்ன அவ்வளவு முக்கியமா?

சார்லஸ்: இல்லியா பின்னே, சஞ்சீவ ரெட்டி போன்ற அதிகாரமற்ற ஆட்சித் தலைவர்கள் வரலாம்; மார்கரெட் தாட்சர் போன்ற அதிகாரமுள்ள ஆட்சித் தலைவர்கள் இருக்கலாம்; ஆனால் ஆட்சித்தலைமை இன்றியே அதிகாரமுள்ளவர் உம்மைவிட்டால் யாருண்டு? அதனால்தான் நீங்க வருவது முக்கியமாகிறது!

ராஜீவ்: பேசமாட்டீங்களா பின்னே, உமக்கென்னய்யா, சிம்மாசனம் ஏறுவதென்பது பரம்பரைப் பாத்தியதையாய் இருக்கிறது; 'ரொம்ப' கவலைமாப்போச்சு...

சார்லஸ்: அதை ஏன் கேக்கறீங்க 'இப்படி ராஜ பரம்பரை அவசியம்தானா? நாடாளுமன்ற ஜனநாயகத்தை ஏத்துக்கிட்ட பிறகு இவங்களை வேறே கட்டிக்கிட்டு அழணுமா?' என்கிற பேச்சு பிரிட்டனில் நாளுக்கு நாள் வலுவடைஞ்சு வருது. ஆனா உம்ம பாடு தேவலாம். பிரதமர் பதவியை ஒழிச்சுக் கட்டணும்னு ஒரு பய பேசமாட்டான். அந்தப் பதவி பரம்பரை பாத்தியமானாலும் யாரும் ஏன், எதுக்குன்னு கேட்க முடியாது! ஜாலி! மக்களின் தீர்ப்புன்னு ஒரே போடா போட்டுடலாம்!

ராஜீவ்: அது சரி, ஆனா உமக்கு வேறு எத்தனையோ சௌகரியங்கள் இருக்கே. உதாரணமா பணத் தட்டுப்பாடே கிடையாது. மக்களோட வரிப் பணத்தில் உங்களுக்கு இவ்வளவு, டயானாவுக்கு இவ்வளவு, உங்க பெற்றோருக்கு, பாட்டிக்கு, சித்திக்கு இவ்வளவு இவ்வளவு என்று எல்லாருக்கும் ஒதுக்கிடறாங்களே...

சார்லஸ்: அது கெட்டுது போங்க! இப்படி அரச மான்யம் ஒதுக்கறதுக்கு நாடாளுமன்றத்திலே அனுமதி வாங்கறதுக்குள்ளே எங்க பிரதமர் படற பாடு போதும் போதும்னு ஆயிடறது! மார்கரெட் அதுக்குக்காத நாளே கிடையாது. அதோட போச்சா? எங்களுக்குத் தரப்படுகிற மானியத்துக்கு அதிகமா சல்லிக் காசு செலவழிச்சாலும் தொலைஞ்சுது. அரசாங்கம் அதை ஏற்காது. அது எங்க சொந்தச் செலவாகிவிடும். ஆனா உங்களுக்கு இந்தக் கவலையெல்லாம் கிடையாதே! ஒரு தேர்தல்னு எத்தனையோ பெரிய பெரிய வியாபாரிகள், தொழில் அதிபர்கள் கணக்கில் வராத கறுப்புப் பணமா தயாரிச்சுக்கிட்டு வந்து குவிப்பாங்க. என்ன செலவு, எவ்வளவு மிச்சம்னு கேட்க ஆள் கிடையாது. எம்.பி.யாக வேறே ஆயிட்டீங்க. எத்தனையோ சலுகைகள், வசதிகள்... இல்லாமலா நல்ல சம்பளம் வந்துக்கிட்டிருந்த பைலட் உத்யோகத்தைக்கூட வேணாம்னு உதறிட்டீங்க? போதாக்குறைக்குச் சொந்தத்தில் ஏதாவது தொழில் தொடங்கி நஷ்டம் வந்துட்டாலும் உங்களுக்குக் கவலையே கிடையாது! ஓர் அவசரச் சட்டம் பிறப்பித்து அதை அரசுடைமை ஆக்கிட்டுப் போட்ட முதலுக்கு லாபகரமாகவே பணத்தை பாக்கெட் பண்ணிப்புடலாம்! எனக்கு அதெல்லாம் முடியாது சுவாமி! ஹூம் எதுக்கும் கொடுத்து வைச்சிருக்கணும்!

ராஜீவ்: என்ன இப்படி அலுத்துக்கறீங்களே... உங்க கல்யாணத்துக்கு எவ்வளவு பப்ளிசிடி, என்ன முன்னேற்பாடு! உலகம் முழுவதும் எல்லாப் பத்திரிகைகளும் டி.வி.யும்

இந்தக்கல்யாணத்தைப் பற்றித்தானே அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கின்றனர்! நீங்க என்னடான்னு புலம்பறீங்களே!

சார்லஸ்: காரணமில்லாமலா புலம்பறேன்? வயித்தெரிச்சலைக் கேளுங்க! இந்தப் பத்திரிகைக்காரங்க படுத்தற பாடு சகிக்கலே! நானும் டயானாவும் டெலிஃபோன்லே நாலு காதல் வார்த்தைகள் பேசிக்கிட்டா அதையும் ஒட்டுக் கேட்டு எழுதிப்புடறானுங்க. உடனே அது பல நாடுகளில் பல மொழிகளில் பெயர்க்கப்பட்டுப் பிரசுரமாகுது! தமிழிலே கூட ஒரு வாரப் பத்திரிகையில் வந்துருச்சாமே! அப்புறம் டயானாவின் தொடைகள் தெரியற மாதிரி தந்திரமாப் படம் எடுத்துப் போடறாங்க! அக்கிரமம்! அநியாயம்! ஆனா உங்க பாடு நிம்மதி! டி.வி. காமிரா ஒண்ணு கிட்ட வந்தபோது ஒரு அதட்டல் போட்டீங்களாமே! உடனே தூர்தர்சன் அந்தக் காமிராமேனுக்கு 'டிரான்ஸ்ஃபர்' கொடுத்து அனுப்பிட்டதாமே! இங்கே அப்படியெல்லாம் நான் நடந்துக்க முடியுமா? நாடாளு மன்றத்திலும் நீதி மன்றத்திலும் என்னை பீஸ் பீஸா கிழிச்சுப் புடுவாங்களே கிழிச்சு!

ராஜீவ்: அதென்னவோ என்னைக் கண்டதும் ஒரு குரல் அழறதுன்னு தீர்மானிச்சுட்டீங்க போலிருக்கு... டயானா வருத்தப்படப் போறா. இப்பத்தான் காதல் கனிஞ்சு கல்யாணத்திலே முடியப் போகுது....

சார்லஸ்: காதலாவது, கத்தரிக்காயாவது? எதுக்குடாப்பா இவளைக் காதலிச்சோம், அவமானத்துக்குள்ளாகிறோம்னு இருக்கு. சம்பிரதாய வழக்கப்படி இளவரசனை மணக்கப் போகும் இவள் கன்னிதான் என்றும் குழந்தை பெற்றுக்கொள்ளக் கூடியவள்தான் என்றும் உறுதிப்படுத்த வேண்டுமாம். அதுக்காக வைத்தியப் பரிசோதனை நடத்தி உலகறிய அறிக்கை விட்டிருக்காங்க! எனக்கே அவமானம் தாங்கலே! பாவம், டயானாவுக்கு எப்படி இருந்திருக்கும்! சே! இதெல்லாம் ஒரு காதலா? காதல்னு நீங்களும் ஸோனியாவும் காதல் பண்ணினீங்களே மாதிரி இருக்கணும்.... ஹாய்யா, நிம்மதியா...

ராஜீவ்: சரி விடுங்க, கொஞ்சம் போலோ ஆடிட்டு வாங்க. உங்களுக்குப் பிடிச்ச கேம். வேதனைகளை மறக்கலாம்!

சார்லஸ்: இந்தக் கிண்டல்தானே வேணாங்கறது! நான் விளையாட்டா பந்தைத் தான் உருட்ட முடியும்; ஆனால் இந்தியாவிலே உங்களால் தலைகளையே உருட்ட முடியும்னு சொல்லாமல் சொல்லிக் குத்திக் காட்டணுமாக்கும்!

ராஜீவ்: அட ஆண்டவனே! இது என்ன, எதைச் சொன்னாலும் இப்படி மூக்கால் அழறீங்களே.... சரி, ஹனிமூனுக்கு இந்தியாவுக்கு வரீங்களா சொல்லுங்க, நானே விமானத்தை ஓட்டி வந்து அழைத்துப் போகிறேன். இந்தியாவின் எல்லா நகரங்களுக்கும் அழைத்துப் போய்ச் சுற்றிக் காட்டுகிறேன்.

சார்லஸ்: ஹூம்... உமக்கு விமானம் மட்டும் ஓட்டத் தெரிந்தால் போதும்னு சொல்லிக் காட்டறீங்களாக்கும்! கொடுத்து வைச்சவர்! என் தலையெழுத்தைப் பாருங்க! பெரிய விமானம், சிறிய போர் விமானம், ஹெலிகாப்டர், கப்பல், டாங்கு, நீர்மூழ்கி, ஹைட்ரோஃபில், குதிரை, மோட்டார் சைக்கிள், கார் போன்ற சகலத்தையும் ஓட்டக் கத்துக்கணும். திறம்படவும் செலுத்தணும். இல்லேன்னா ஆளை விட மாட்டாங்க! ஆனா நீங்க? டாங்கு, நீர்மூழ்கி, ஹெலிகாப்டர், போர் விமானம் முதலியவற்றைப் பார்வையிட்டாலே போதும். போட்டோ பிடிச்சு எல்லாப் பத்திரிகைகளிலும் போடுவாங்க! ஹூம், உமக்கென்ன, ராஜா போல வாழ்க்கை!

ராஜீவ்: சரியாப் போச்சு! இதென்ன புலம்பல்? உம்மைப் பார்த்தால் பரிதாபமா இருக்கு. நீர் வேணுமானா டயானாவுடன் என் இடத்துக்கு வந்துவிடும்; நானும் ஸோனியாவும் உம் இடத்தில் அமர்ந்து கொள்கிறோம்.

சார்லஸ்: உங்களோட தயாள குணத்தைப் பயன்படுத்திக்கொள்ள எனக்கு எவ்வளவோ ஆசைதான். ஆனால் இடம் மாற்றிக்கலாம்னு நீங்க இவ்வளவு தைரியமா சொல்றீங்களே, என்னால் அதை நினைச்சுக் கூடப் பார்க்க முடியுமா? கொஞ்சம் நான் முணு முணுப்பதாக வெளியே தெரிஞ்சாலும் போதும். உடனே, தேசத் துரோகின்னு என் பேரில் பழி சுமத்தி, பத்தி பத்தியா எழுதி, சந்தி சிரிக்க அடிச்சு..... ஐயோ! வேணாம்! வேணாம்! நினைச்சாலே பயமா இருக்கு! வேண்டவே வேண்டாம்!

(இந்தச் சமயம் "இளவரசே!" என்று யாரோ அழைக்கும் குரல் கேட்க "இதோ வந்துவிட்டேன்! அந்த நிகழ்ச்சிக்குச் சித்தமாயிருக்கிறேன்!" என்று பயந்து நடுங்கிக்கொண்டே கூறியபடி ஓடுகிறார் சார்லஸ்.

ராஜீவ், ஸோனியா பக்கம் திரும்பி, "ஐயோ பாவம்!" என்கிறார். ஸோனியா பெருமிதத்தால் முகம் மலர, "என்னதான் இருந்தாலும் இளம் பிரதமர், இளவரசரை விட ஒசத்திதான்" என்று கூறியவாறே ராஜீவ் கன்னத்தில் முத்தமிடுகிறார்)!

"என்னுங்க கல்யாணப் பத்திரிகையில் ஒரு பக்கம் ஜோக்குகளும் துணுக்குகளுமாயிருக்கு!"

"மாப்பிள்ளை துணுக்கு எழுத்தாளராச்சா, அவர் எழுதிய துணுக்குகள் அவர் கல்யாணப் பத்திரிகையிலாவது வரணும்னு ஆசைப்பட்டார், அதனாலதான்!"



# பலி கொடுத்தது போதாதா? புத்தி பெற முடியாதா?

**234** உயிர்கள்; 234 ஏழைகள்; கள்ளச் சாராயத்துக்குப் பலி!

மாண்டவர் எண்ணிக்கை நாளுக்கு நாள் கூடுகிறது!

உற்றமும் சுற்றமும் புலம்புகிறது. பெங்களூர் நகரமே வெலவெலத்துப் போயிருக்கிறது.

இதற்கு முன்பே பல தடவைகளில் தமிழகத்திலும் தலைநகரிலும் வேறுபல மாநிலங்களிலும் எத்தனையோ உயிர்கள் கள்ளச் சாராயத்துக்குப் பலியாகியுள்ளன.

காந்திஜியும் ராஜாஜியும் ஏழை இந்தியாவுக்கு அத்தியாவசியம் என்று வற்புறுத்திய மதுவிலக்கின் முக்கியத்துவத்தை நமது இன்றையத் தலைவர்கள் உணருமுன் இன்னும் எத்தனை ஆயிரம் ஏழைகள் உயிர்த்தியாகம் செய்ய வேண்டுமோ?

''மதுவிலக்கினால்தான் கள்ளச் சாராயம் பெருகுகிறது'' என்று கூறிய சுயநலமிகளின் சுயரூபத்தை இப்போதேனும் மக்கள் உணரட்டும்!

''மதுவிலக்கினால்தான் போலீஸில் லஞ்ச லாவண்யங்கள் அதிகரிக்கின்றன'' என்று கூறிய பித்தலாட்டக்காரர்கள் இனியேனும் வாயை மூடிக் கொள்ளட்டும்!

''அண்டை மாநிலத்தில் மதுவிலக்கு இல்லாதபோது இங்கு மட்டும் மதுவிலக்கு எப்படி வெற்றிபெறும்?'' என்று கேட்டவர்கள், முகத்தில் வழிகிற அசட்டுத் தனத்தைத் துடைத்துக் கொள்ளட்டும்!

மதுவிலக்கை அமல் படுத்தாமலிருக்கிற மாநில அரசுகள் இனியேனும் விழிப்புணர்ச்சி பெறட்டும்.

''அமெரிக்காவிலேயே மதுவிலக்கு வெற்றி பெறவில்லையே'' என்று ஏழை இந்தியாவை உலகிலேயே பணக்கார நாடுடன் ஒப்பிட்டுப் பேசிய முட்டாள்கள் மூக்காடிட்டுக் கொள்ளட்டும்!

''மதுவிலக்கினால் அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகள் வருகை குறையும்; அந்நியச் செலாவணி நஷ்டமாகும்'' என்று கூறியவர்கள் பெங்களூர்ச் செய்திகளை மறுமுறை படிக்கட்டும்!

பெங்களூர் நிகழ்ச்சி மதுவிலக்குக்கு எதிரான அனைத்து வாதங்களிலும் உள்ள அபத்தங்களை வெட்டவெளிச்சமாக்கியுள்ளது.

''அப்படியாவது நமது மக்களின் உயிரையும் ஆரோக்கியத்தையும் பலி கொடுத்து அந்நியச் செலாவணி சம்பாதிக்க வேண்டியது அவசியம்தானா?'' என்று கேட்கிறது பெங்களூர் நிகழ்ச்சி!

பெங்களூரில் மதுவிலக்கு கிடையாது; ஆயினும் அங்கு கள்ளச் சாராயம் தண்ணீராய் ஓடியிருக்கிறது!

பெங்களூரில் மதுவிலக்கு கிடையாது; ஆயினும் அங்கு கள்ளச் சாராயக் காரர்களிடம் லஞ்சம் பெற்றுக்கொண்டு போலீஸாரே அதை அனுமதித்திருக்கிறார்கள். போலீஸாரே கள்ளச் சாராயம் அருந்திச் செத்திருக்கிறார்கள்!

இதிலிருந்து என்ன தெரிகிறது? மதுவிலக்கை ரத்து செய்வது கொடுமை. அதனினும் கொடுமை பெருந்தொகைக்குச் சாராயக் கடைகளை அரசாங்கமே ஏலம் விடுவது. மேலும் பெரிய கொடுமை கட்டுப்படியாகாத விலையில் சாராய விநியோகத்துக்கு அரசு அனுமதி தருவது.

நிகர விளைவு சாராயக் கடைகளை ஏலம் எடுத்தவர்களே கள்ளச் சாராயம் தயாரிக்கிறார்கள். வேறு பலரும் அந்த வியாபாரத்தில் இறங்குகிறார்கள். தண்ணீர் கலந்தால் 'கிக்' கிடைக்காது என்பதால் அந்நியப் பொருள்கள் – விஷங்கள் – கலப்பட மாகின்றன. மக்கள் மலிவான கள்ளச் சாராயத்தையே நாடுகிறார்கள். செத்து மடிகிறார்கள்.

மதுவிலக்கைத் தீவிரமாக அமல்படுத்த மனமும் ஆற்றலும் அற்றவர்கள் தான் சாக்குப்போக்கு சொல்வார்கள்; விதண்டா வாதங்களுக்குச் செவிமடுப்பார்கள். மனம் இருந்தால் மார்க்கம் உண்டு; போலீஸின் ஒத்துழைப்பும் உண்டு.

1981 ஜூலை 19

துன்மதி ஆடி 4

மலர்: 39 இதழ்: 51



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

Justice in this Country (South India) is weighed and sold by weight of gold.

-Betrand

## 16

ஒபோர்தோ என்ற அந்தக் கேளிக்கை மாளிகை எல்லா வெள்ளையருக்கும் சுவர்க்கமாக இருந்தது. குடி, சூதாட்டம், பணயம், பெண் போகம் ஆகிய மனித இச்சைகள் யாவற்றுக்கும் சுதந்திரமான இடம் கொடுத்தது அது.

இதனால் ஸாந்தோமேயின் கேந்திர இடமாக விளங்கியது அந்த மாளிகை.

ஊரின் பெரிய புள்ளிகள் எல்லாம் அதன் மடியில் எப்போதும் தவம் கிடந்தார்கள்.



வெள்ளை அழகிகளுக்கு அது ஒரு பணம் பறிக்கும் வேட்டைக்களமாக இருந்தது.

பத்து வயதுச் சிறுமி முதல் ஐம்பது வயதுப் பெண்வரை மனித சபலங்களின் எண்ணற்ற வகை முறைகளைத் திருப்திப்படுத்துவதற்காக இருந்தார்கள்.

இரண்டு போர்த்துகீசிய நபர்கள் தமது கைகளை இடுப்புக்குள் கொண்டு போக,

அதன் நுண்ணிய நிழல் ஜாடைகளை நுட்பமாக உணர்ந்தான் வீரமாலி.

அவன் வலது கால் மேஜை அடி வழியாக நீண்டு அர்ச்சுனனின் இடது காலிடம் சேதியைச் சொன்னது.

இருவரும் மேஜைப் பலகை அடியில் தங்கள் கைகளைக் கொடுத்தார்கள்.

நான்கு கால்கள் மேல் இரண்டு இலைப் பலகை போட்டு அந்த மேஜையை உருவாக்கி இருந்தார்கள்.

அதை இருவரும் கவனித்திருந்தார்கள்.

இருவர் கண்களும் சர்வ கவனமுடன் அடுத்த நிழல் சலனத்தை எதிர்பார்த்திருந்தன.

சில விநாடிகளில் இரு வெள்ளையரும் ஒரு குதிக்கும் ஆத்திரமுடன் வீச்சென்று கத்தியை உருவினார்கள். உருவினது தான் தெரியும். அவை மேலே போனதோ, காற்றைக் கீறி விட்டுக் கீழே இறங்கியதோ தெரியாது.

அவ்வளவும் நொடிப் பொழுதில் நடந்தவை.

கண்களால் உணரக்கூட முடியாது.

அவை இறங்கிய வேகத்தில் அவைகளின் குறுக்கே மனித உடல் வந்திருந்தால், அந்த ஆயுதங்கள் உடலின் அதள பாதாளத்துக்குள்ளே போயிருக்கும்.

ஆனால் வீரமாலி இடது புறமும், அர்ச்சுனன் வலது புறமும் நகர,

அந்தக் கட்டையான கத்திகள் இரண்டும் கோபக் கனலுடன் கரீச்சென்று காற்றில் சிதைந்து மேஜைப் பலகை மீது ஆக்ரோஷமாகக் குத்தி நின்றன.

குத்திய வேகத்தில் அவை பல அங்குலங்கள் உள்ளே, புகுந்து கிடுகிடுவென்று ஆடி நின்றன.

அடுத்த கணம் பலகை எழுந்த அதிசயம் அதைவிட ஜாலமாக இருந்தது.

இரண்டு கேடயங்கள் போல் அவை கிளம்பி அந்த இரு வெள்ளையர்கள் முகங்களிலும் பளீர் என்று அறைந்தன.

இருவரும் தடுமாற்றத்தில் விழ உள்ளே ஆஹாகாரம்.

டோமினோ ஆடிக் கொண்டிருந்த இருவர் சிங்கென்று துள்ளி வந்தார்கள். பலமாக வசைபாடி இந்தியர்கள் மீது பாய்ந்தார்கள்.

அவர்களுக்குத் துணையாக இன்னும் இரண்டு பேர் சேர்ந்தார்கள்.

அர்ச்சுனனும் வீரமாலியும் இதற்குள் நாற்காலிகளைத் தூக்கி விட்டார்கள்.

ஒற்றைக் கையால் சிலம்பாட்டம் ஆட கண்ணாடி டம்ளர்கள் டணார் டணார் என்று சிதறின.

மேலே கண்ணாடிக் கூண்டுகள் ஆயிரமாகச் சிதறின.

லோ லோ லோ என்று பெண்கள் கீச்சுக் குரலில் கத்தினார்கள்.

கவுன்கள் பறக்க வாசல் படிகளில் இடி பாடுகளோடு சிதறினார்கள்.

உள்ளே வெள்ளைக்காரர்கள் மேலும் பலர் ஒன்று சேர்ந்து கொள்ள,



அர்ச்சுனனும் வீரமாலியும் ஒரு நிஜ யுத்தமே நடத்த வேண்டி வந்தது. சளைக்க வில்லை. இங்கும் அங்கும் தாவிக் கிடைத்ததை எல்லாம் எடுத்துத் தாக்கினார்கள்.

கவுண்டரில் இருந்த கண்ணாடிப் பாத்திரங்கள் பறந்தன. கூஜாக்கள் மதுவுடன் போய்ச் சுவரில் மோதின.

நாற்காலிக் கால்கள் பறந்தன. மேஜைப்பலகைகள் பறந்தன. எங்கும் கணீர் கணீர் என்று ஓசைகள் சிதறின. அவ்வப்போது ஒரு மனித ஒலி அவலமாக எழுந்தது.

சில நிமிடங்கள் வரை போர் மழை. பிறகு, பலத்த கூக்குரலுடன் வெள்ளைக் காரர்கள் வெளியே வழிய, மெள்ள மெள்ள ஆர்ப்பாட்டங்கள் இறக்கையை மடித்துக் கீழே இறங்கிக் கொண்டிருந்தன.

ஓபோர்த்தோ மாளிகை மயான நிசப்தம் ஆன பிறகு, இரு இந்தியர்களும் ஒரு மனத் திருப்தியுடன் வெளியே வந்து படிகளில் எக்காளமுடன் காலை ஆற்றி நின்றார்கள்.

''பிரமாதம் வீரமாலி!'' என்று அர்ச்சுனன் சொல்ல, ''உங்கள் மல் யுத்தம் பிரமாதம்!'' என்றான் அவன்.

டபீர் என்று அப்போது ஒரு சத்தம். இருவரும் திரும்பிப் பார்க்க, ஒரு நடு வயது

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்



ஜனதா ஆட்சியின்போது சஞ்சய் காந்தியின் ஆதரவாளராக, விமானம் கடத்திப் புகழ் பெற்ற வீரர்(!) போலோ பாண்டே, இந்திரா கட்சியின் சார்பாக உ. பி. மாநில சட்ட மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருக்கும் மற்றொரு இந்திரா கட்சி எம். எல். ஏ. ஆன சுமன் லதா தீட்சதத்திற்கும் திருமணம் நடைபெற்றது.

இதைத் தொடர்ந்து ராம்கோபால் பூரி என்ற வாக்காளர், தங்கள் தொகுதி சட்ட மன்ற உறுப்பினரான லதாவை, ஏற்கனவே திருமணமாகி ஓர் ஆண் குழந்தைக்கும் தந்தையான பாண்டே திருமணம் செய்து கொண்டது செல்லாது என நீதி மன்றத்தில் வழக்கு தொடர்ந்துள்ளார். திருமணமாகி மனைவி உயிருடன் இருக்கும் போது மீண்டும் தங்கள் தொகுதியைச் சேர்ந்த ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வது தொகுதி வாக்காளர்களின் உள்ளங்களைப் புண்படுத்துவதாகும் என்பதும் பூரியின் வழக்கு.

தகவல்: கோ. கவிவரதன்

வெள்ளையன், உள்ளே ஒளிந்திருந்தவன் பின்புறமாக வந்து அவர்களைச் கட்டிருந்தான்.

அரை விரற்கடையில் குண்டு அர்ச்சுனனைக் கடந்து ஓடியது.

கோபாவேசமாக இருவரும் திரும்பி, கட்டடத்துள் மீண்டும் பாய்ந்து, அந்த வெள்ளையனைச் சுவர்ஓரமாகக் கிடுக்கினார்கள்.

வெள்ளையன் வியர்க்க விறுவிறுக்க மேலும் ஒரு முறை சுட்டு, கடைசியில் இளைப்பாகிக் கீழே விழுந்தான்.

அர்ச்சுனன் அவனைச் சொக்காயோடு தூக்கி நிறுத்தினான்.

முகவாயில் கும்மென்று ஒரு முஷ்டியை அடித்துச் சிதற விட்டான்.

''ஐயோ! ஐயோ!'' என்றான் வெள்ளையன், ''என்னை விடுங்கள் என்னை விடுங்கள்!''

மேலும் பல பூசைகள் கொடுத்துவிட்டு, ஒரு உடைந்த நாற்காலியில் ஒரு தள்ளுத் தள்ளினான் அர்ச்சுனன்.

''சொல்லு! இந்த ஊரில் இந்திய அடிமைகள் எத்தனை பேர் இருக்கிறார்கள்?''

நடுங்கிய குரலில் வெள்ளையன், ''நாற்றுக் கணக்கிலே இருக்காங்க!'' என்றான்.

''எந்தெந்த வீட்டிலே இருக்காங்க சொல்லியா?''

''சொல்றேன், சொல்றேன்.''

''உனக்கு இந்த ஊர்தானே?''

''அநேகமா இந்த ஊர்தான்!''

''பெரிய குடும்பத்துப் பெண் யாராவது இங்கே அடிமையா இருக்காங்களா?''

''அநேகம் பேர் இருக்காங்க!''

''சுவர்ணமுகின்னு ஒருத்தி இருக்காளா?''

''யார் அவ? எப்படி இருப்பா?''

''உயரமா இருப்பா. தீர்க்கமான மூக்கு, உயர்ந்த குடும்பம். சந்திரகிரியைச் சேர்ந்தவள்.''

''நெற்றியிலே சிவப்பு நாமம் போட்டிருப்பாளா?''

''ஆமாம்.''

''அப்படிச் சொல்லுங்க!'' என்று எழுந்து உட்கார்ந்தான் வெள்ளையன்.

''எனக்கு அவளைத் தெரியும். பத்திரமா இருக்கா.''

''எங்கே?''

வெள்ளையன் தன் கோட் பையிலிருந்து ஒரு பாட்டிலை உருவினான். ''உங்கள் ஆரோக்கியத்துக்கு!'' என்று சொல்லி ஒரு மடக்கில் பாதிப் புட்டியைக் குடித்தான்.

'எனக்கு ஒரு பலவீனம்! நம்பர் ஒண்ணு மது, ரெண்டு சூதாட்டம், மூணு கவிதை, நாலு பொண்ணு!''

''ஓகோ! சுவர்ணமுகி எங்கே சொல்லு!''

''எங்கே தெரியாது!''

''பத்திரமா இருக்கான்னு எப்படிச் சொன்னே?''

''அது தெரியும். ஒரு வெள்ளையன் கிட்டே இருக்கா!''

''யார் அவன்?''

''ட்ரேக் ராஜர். ஒரு தான்தோன்றி வியாபாரி! உதவாக்கரை! எனக்கும் அவனுக்கும் தான் போட்டி! யார் அந்தப் பெண்ணை வைத்துக்கொள்கிறதுன்னு!''

ராஜரின் பெயரைக் கேட்டதும்,

அர்ச்சுனன் திடீரென்று தீவிரமானான். அவன் மனத்தில் அதுவரை அரித்திருந்த ஒரு கவலை பக்கென்று அணைந்தது.

''ஓ! நீயும் அவனும் போட்டியா? எங்கே பார்த்தீர்கள் அவளை?''

''இங்கேதான்! கடற் கரையிலே! ஒலாந்தியன் வான் கோயன்ஸ் கொண்டு வந்தான். ராஜர் தனக்கு வேணும்னு சொன்னான். நான் விடல்லே. ரெண்டு பேரும் சண்டை போட்டோம். செம்மையாகத் தாக்கினேன். பெண்ணோடு ஓடிட்டான்.''

''எங்கே போனாங்க?''

''வடக்கேதான்.''

# கல்கி

## ஆகஸ்டு 2 ஆண்டு மலர்

**112 பக்கங்கள்**

★ நினைவில் நிற்கும் காட்சிகள் — வாசகர் பங்கு

★ திரை உலகின் பிரபலஸ்தர்கள் எழுதும் கதை, கட்டுரைகள்

★ சினிமா நட்சத்திரங்களின் உரையாடல்கள்; பேட்டிகள்

★ முழு நீள நாவல்: எழுதுவது யார்? — போட்டி முடிவு

★ அமரர் கல்கி நினைவு சிறுகதைப் போட்டி - '81: ரூ. 1000 முதல் பரிசு பெறும் சிறுகதை

★ 'டணால்' தங்கவேலு பங்கேற்கும் சித்திரத்தொடர்

★ அரிய புகைப்படங்கள்

★ திருத்தலம் கண்டேன்
— வாசகர்கள் எழுதும் கட்டுரைகள் ஆரம்பம்

★ உமாபதி: படம் பிடிக்கும் போதினிலே...



தமிழ் பேசும்
திரைப்படத்தின்
பொன் விழா
ஆண்டினை யொட்டி
சினிமா சிறப்பிதழ்
என மலர்கிறது.

''ஓ!'' என்று சொல்லி அர்ச்சுனன் புருவத்தைத் தூக்கினான்.

சிறிது யோசித்தான்.

''உன் பேர் என்ன?''

''பிரான்ஸிஸ் டே.''

''டேயா?'' என்றான் அர்ச்சுனன் ஆச்சரியமாக.

''ஏன், என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''உனக்கு மசூலிப்பட்டினமா?''

''எப்படித் தெரியும்?''

''தெரியும். உன்னை ஆனைகொந்தியில் பார்த்திருக்கிறேன்.''

''அடேடே!'' என்று எழுந்தான் டே.

''இங்கே ஏன் வந்தீர்கள்?'' என்று இப்போது மரியாதையுடன் பேச ஆரம்பித்தான் அர்ச்சுனன்.

''எனக்கு ஸாந்தோமே ஒரு பெரிய பொழுதுபோக்கு. என் அருமை டியானா இங்கே இருக்கா. இந்த கிளப் இங்கே இருக்கு! சூதாட்டம் என் அடுத்த உயிர்! என் டியானாவுக்கு அடுத்தபடி! அதனால் அடிக்கடி மசூலிப்பட்டணத்தை விட்டு இங்கே அடிக்கடி வருவேன். தங்குவேன், போவேன்.''

அர்ச்சுனன் கட்டடத்து நடுக் கூடத்தைப் பார்த்தான்.

அவன் விளைவித்த நாசம் முழுதும் கூளம் கூளமாகத் தெரிந்தது.

''உங்கள் கிளப்பை நாசம் செய்ததற்கு வருத்தமடைகிறேன். ஆனால் அதற்கு வலுவான காரணம் உண்டு. இந்தியர்களை நீங்கள் கேவலமாக்கி, அடிமையாக்கி இங்கே வச்சிருக்கீங்க! அது எங்களுக்குப் பிடிக்கலே. நல்லது டே! நாங்கள் வந்த காரியம் ஒரு மாதிரி முடிஞ்சு போச்சு. நாங்கள் வரோம்.''

கிளம்பினார்கள்.

''நாம்ப வடக்கே போறோம்!'' என்றான் அர்ச்சுனன் வீரமாலியிடம்.

நெருக்கமாக மரங்கள் வளர்ந்திருந்த அந்த அடவியின் நடுவில் சுவர்ணமுகி வெகு நேரம் ஒரு புதர் ஓரம் படுத்திருந்தாள்.

ஆயாசமும் இளைப்பும் அவளை வெகுவாகச் சோர்வடைய வைத்தன.

நடப்பது நடக்கட்டும் என்று கண்ணை மூடிப் படுத்து விட்டாள்.

அது ஒருவித விரக்தி! உலகத்தின் மீதே அவளுக்கு வெறுப்பு வந்திருந்தது.

மௌனக் கண் கவிழும் போது, தூரத்தில் எங்கேயோ மனித அரவங்கள்; பல எச்சரிக்கைகளும் உத்தரவுகளுமாகக் கேட்டன.

நிச்சயம் அவளைத் தேடத்தான் ஆட்கள் வருகிறார்கள் என்று அவளுக்குத் தெரியும்.

அதைப் பற்றி அவள் எந்த அக்கறையும் காட்டவில்லை.

நடப்பது நடக்கட்டும் என்று இருந்து விட்டாள்.

கண்கள் சுழன்று வர மெள்ள தூக்கம் ஒரு கனமான பாரம் போல் இமைகளில் வந்து அழுத்தின.

சில விநாடிகள்தான்!

பிறகு அவள் சுவர்ணமுகி என்ற நினைவையே இழந்து தூக்கத்தின் நூறு பிரசம் ஆழத்தில் அப்படியே ஆழ்ந்து போனாள்.

தூக்கத்தில் ரொம்ப தூரம் போன பின் எங்கிருந்தோ அந்தக் குரல் வந்தது.

என்ன குரல்?

பழகிய குரல் போல் இருக்கிறதே!

குதிரை ஒன்று பைசாசம் போல் வந்தது. அதன் உடம்பில் ரத்தம் மெழுகிய கோலம்.

அந்தத் தீ வெளிச்சப் பகலில் அது வருவதே விநோத பயமாக இருந்தது.

அது அவள் அருகில் வந்து நின்றதும், மேலே அந்த உருவம் தெரிந்தது.

களைத்து சோர்ந்து உலைந்த உருவம். யுத்த களத்தின் சூட்டிலிருந்து அப்போதுதான் வந்திருக்கிறது. அவளைப் பார்த்தால் ....

என்ன கம்பீரமாகப் பார்த்தான் அவன்!



''நேற்றுவரை பகுத்தறிவுவாதியாக இருந்துவிட்டு இன்று ஹரிகதா காலட்சேபம் கேட்கப் போகிறேனென்கிறாயே!''

''அரசியல் கூட்டங்களில் சில குட்டி உபமானக் கதைகள் சொல்ல வேண்டியிருக்கு!''

என்ன அழகாகப் பேசினான் அவன்!

என்ன அக்கறையுடன் விஷயத்தைச் சொன்னான் அவன்.

அவன் உருவமும், அவன் குரலும் ஏன் அவள் எங்கு போனாலும் தொடர்ந்து கொண்டே இருக்கிறது!

அது ஒரு பெரிய விந்தை தானே!

இங்கே இந்தக் காட்டில் கூட அந்த உருவம் இதோ, இதோ, இதோ....

கண்ணை பக்கென்று விழித்தான் அவள்.

தன் சூழ்நிலையைப் புரிந்து கொள்ளச் சில கணங்கள் ஆகின.

ஆகா! அரண்யத்தில் அல்லவா இருக்கிறோம்!

இவன் யார்?

யார் இந்த நபர்?

வாரிச் சுருண்டு எழுந்தாள் அவள்.

(தொடரும்)

**மீ.ப.சோமு**

# இதயத்தைத் தொடாத கல்வி



## ரசிகமணி ரசித்த மணிகள்



இன்பமயமாக இருக்க வேண்டிய பள்ளிக்கூடப் படிப்பு ஏன் ஒரே துன்ப மயமாகப் போய்விட்டது என்று டி.கே.சி. அடிக்கடி கேட்பார். பிள்ளைகளின் உடல் ஆரோக்கியம், மன ஆரோக்கியம் இரண்டுமே ஏன் இப்படிக் கெட்டுப் போகிறது என்று ஆழ்ந்து சிந்திப்பார்.

மக்காலே கல்வித் திட்டத்தில் இதயம் என்றதொன்றை எண்ணிப்பாராமலேயே பாடங்களை வகுத்துப் பரீட்சைகளை நடத்தி, வெறும் உருப்போடும் இயந்திரங்களாகவே பிள்ளைகளைக் கெடுத்து விட்டார்கள் என்பது டி.கே.சி கண்ட முடிவு. மனித மனத்தின் இயல்புகளையும், இதயப் பாங்குகளையும் நன்றாக ஆராய்ந்து, இந்தத் தெளிவோடு நமது கல்வி முறை பற்றிப் பேசுவார் ரசிகமணி. இதோ—

''இயற்கை தன் மடிக்குள் ஒளித்து வைத்திருக்கிற அதிசயங்களைக் கண்டு பிடிக்க முயல்வதிலும், கண்டுபிடிக்கிற திறத்திலும், கண்டு பிடித்தவுடன் உண்டாகும் ஆனந்தத்திலும் மனிதன் தனித்தே நிற்கிறான். இத்தோடு நிற்கவில்லை. அந்த ஆனந்தத்தை மற்ற மக்களுடன் கூடி அனுபவிப்பதிலும், தலைமுறை தலைமுறையாக மக்கட் சமுதாயம் அனுபவிக்கும்படியான விழாக்கள் ஏற்படுத்துவதிலும், நூல்கள் எழுதி வைப்பதிலும் அப்படியே தனித்து நிற்கிறான். மற்ற ஜீவராசிகள் எல்லாம் அவனை விட்டு எவ்வளவோ தூரத்தில் விலகி நிற்கின்றன. நான்முகனுக்குச் சிறந்த கிரீடம் நாமே என்று சொல்லிக்கொள்ளலாம்.

ஒன்றைப் பார்த்து உண்மையாகவே அனுபவிக்கிறதுக்கும், அதன் இயல்பைப் பூரணமாகத் தெரிந்து கொள்வதற்கும் அதிகாரிகள் தாய்மார்கள்தான்! ஆடவர்களாகிய நாமோ கொஞ்சம் எட்டி நிற்க வேண்டியதுதான். தாய்மார்களால் அனுபவித்துப் பாராட்ட முடியாத ஒரு விஷயம் இருக்குமானால் அதன் தரத்தைப் பற்றிக் கொஞ்சம் சந்தேகப்படுவது குற்றம் அல்ல.

உண்மையை நிறுத்துப் பார்ப்பதற்கும், அதன் மாற்றை நிர்ணயம் செய்வதற்கும் தாய்மார்கள் உரைகல்லாய் இருக்கிறார்கள்.

குழந்தைகளை வளர்ப்பதும், குடும்பத்தைக் காப்பதும் அற்புதமான கலை. இந்தக் கலையைப் பல்லாயிரம் ஆண்டுகளாய்த் தொடர்ந்து பாதுகாத்து வருகிறார்கள் தாய்மார்கள். அதன் மூலம் எங்கும் இல்லாத ஆனந்தத்தை அடைகிறார்கள்.

ஆங்கிலக் கல்வி முறையால் ஆடவர்கள் கெட்டுவிடுகிறார்கள். ஆனால் அக் கல்வியின் மூலம் தாய்மார்கள் கெடுவதுதான் கொடுமையிலும் கொடுமை.

குழந்தை வளர்ப்பைப் பற்றியும், சமையல் பற்றியும், குடும்ப நிர்வாகம் பற்றியும் தாய்மார்களுக்கா சர்வ கலாசாலை சொல்லித் தரவேண்டும்? அடடா!

ஆடவர்களுடைய இதயப் பாங்கும் தாய்மார்களுடைய இதயப் பாங்கும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாதவை. இரும்புக்கும் பிச்சிப் பூவுக்கும் உள்ள வேறுபாட்டை விட அதிகம் வேறுபாடு கொண்டவை. ஆடவர்களின் இதயத்தையே கெடுத்து ஏமாளியாக்கிவிடுகிற ஆங்கிலக்கல்வி தாய்மார்களைச் சும்மா விடுமா? படித்த பெண்களுக்குச் சமைக்கத் தெரியாது. குடும்பத்தைப் பேணத் தெரியாது. குழந்தைகளைப் பாதுகாக்கத் தெரியாது. எல்லாவற்றையும் விடக் கோடி கோடி ஆண்டுகளாய்த் தொடர்ந்து வருகிற ஆனந்தமான தாய்மைத் தத்துவம் இருக்கிறதே, அதனுடைய குரல்வளையையே நெரித்து விட்டது இந்த ஆங்கிலப் படிப்பு!''

மேலே உள்ள கருத்துக்களை டி.கே.சி. எழுதியது முப்பது ஆண்டுகளுக்கு முன்பு. இன்று நிலைமை ஓரளவு மாறியிருக்கிறது. இன்னும் வருங்காலத்தில் மேலும் மாறுவதற்கு இடமிருக்கிறது. ஏனென்றால் நம் கல்வி முறையில் சீர்கேடுகள் நிறைய இருக்



கோசல்ராம்



யோகேந்திர மக்வானா

# சிக்கினார்கள்!



காளிமுத்து

● கங்க இலாகாவில் குமாஸ்தாவாக இருந்து அரசியலில் புகுந்து தற்போது மந்திரியாக இருக்கும் மக்வானா காங்கிரஸில் சேரும் முன்னர் பிரஜா சோஷலிஸ்ட் என்ற கட்சியில் இருந்தார். இவருக்கு முன்னமே இவரது மனைவி, அரசியலில் ஈடுபட்டு, சட்ட மன்ற உறுப்பினர் ஆகிவிட்டார். இப்போது மக்வானாவின் ஒரே நினைப்பு — அவர்தான் அரிஜனங்களின்ஏற்றத்துக்காகக் குரல்கொடுக்கும் ஒரே நபர் என்பது. தற்போது அவருக்குப் பிடிக்காத இரண்டு பேர்கள்: (1) குஜராத் முதல்வர் மாதவராவ் சோலங்கி (2) தமிழ்நாடு முதல்வர் திரு எம். ஜி. ஆர்.

● பாராளு மன்றத்தில் 1981—82க்கான ரயில்வே பட்ஜெட்டை ரயில்வே மந்திரி வாசித்து முடித்தவுடன், தமிழ் நாட்டைச் சேர்ந்த பாராளு மன்ற உறுப்பினர்கள் மத்தியில் சலசலப்பு எழுந்தது. காரணம்: ரயில்வே பட்ஜெட்டில் இடம்பெறும் என்று அவர்கள் நினைத்த கரூர் — திண்டுக்கல் பிராட்கேஜ் திட்டம் பட்ஜெட்டில் இடம்பெறவில்லை. உடனே தி. மு. க. உறுப்பினர் சி.டி. தண்டபாணி, காங்கிரஸ் உறுப்பினர், கே.டி. கோசல்ராமுக்கு ஒரு சிக்னல் கொடுத்தார்- கோசல்ராம், உடனே எழுந்து ''கரூர்—திண்டுக்கல் பிராட்கேஜ் திட்டம் பட்ஜெட்டில் இடம்பெற வேண்டும்'' என்று சத்தமாகக் கூறினார். அவரைத் தொடர்ந்து, காங்கிரஸ் உறுப்பினர்களும் தி. மு. க. உறுப்பினர்களும் கோஷம் போட்டார்கள். ஆளும் கட்சியினருக்கோ, தங்களுடைய கட்சி உறுப்பினர்களே கோஷம் போடுவதைக் கேட்க வியப்பு. திடீர விளைவு கரூர்—திண்டுக்கல், பிராட்கேஜ் திட்டம் 6வது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டது.

● மக்வானாவுக்கு, சரியான பதிலடி கொடுத்து மூக்கை உடைத்திருக்கிறார் நமது முதல்வர். அவ்வளவுதான் அவரின் சகாக்களுக்கும் உற்சாகம் பிறந்து விட்டது. இடையில் கொஞ்ச நாட்களாகக் கட்டிப் போட்டிருந்த வாயைத் திறந்து விட்டு, தற்போது மக்வானாவை விளாசி மேடையில் பிய்த்தெறிந்து கொண்டிருக்கிறார்கள். இதில் ரொம்பச் சந்தோஷப்படுகிறவர் அமைச்சர் காளிமுத்துவாகத்தான் இருக்க வேண்டும்!

— கௌசல்யா

கின்றன என்றும், ஏதேதோ சீர்திருத்தங்கள் செய்ய வேண்டியது மிக மிக அவசியம் என்றும் குற்றவாளிகளே இப்போது சொல்லத் தொடங்கிவிட்டார்கள்!

இந்த நிலையில் குழந்தைகளுக்கு உரிய கல்வி முறை பற்றி ரசிகமணியின் கருத்துக்களைப் பார்க்கலாம்:-

குழந்தைகள் வெகு ஜோராய் விஷமங்கள் செய்து கொண்டிருக்கின்றன. விஷமங்கள் எல்லாம் நாடகங்கள்தான். ஒவ்வொரு நிமிஷமும் கலையைக் கற்றுக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் பள்ளிக்கூடத்தில் 40 பிள்ளைகளுக்கிடையே உட்காரவைத்து உபாத்தியாயரையும் முன்னே நிறுத்திவிட்டால், என்னத்தைப் படிப்பார்கள் அவர்கள்! செயல் செய்து உடலின்ஒவ்வொரு அம்சமும்தொழில் பட்டால்தான் குழந்தைகளுக்குக் கல்வி வரும். அறுபத்து மூவர் மாதிரி உட்கார்ந்திருந்து உபாத்தியாயரின் உபன்யாசங்களைக் கேட்டால் கல்வி வரவா செய்யும்? குழந்தைகளின் இயல்பான அறிவு, பண்பு, ஆக்கம் இவைகளைப் பார்க்கப் பார்க்கப் பள்ளிக்கூடங்கள் செய்து வரும் அநியாயங்களையும் கொடுமைகளையும் சகிக்க முடியவில்லை மனசுக்கு!

இரண்டாவது பாரத்தில் முதல் நாள் போய்ப்பையன் உட்கார்ந்திருக்கிறான். உபாத்தியாயர் முதல் கணக்காக ஆரம்பிக்கிறார்.

''அறுபத்தேழு லக்ஷத்து ஐம்பத்தோராயிரத்து நானூற்று முப்பத்தொன்பதில் (ஏ) ஆயிரங்களாகவும், (பி) பத்துக்களாகவும், (சி) ஒன்றுகளாகவும் இருக்கின்றன. ஏ. பி. சியின் மதிப்பு என்ன?''

எப்படி இருக்கிறது காரியம்!!!

குழந்தைகள் சதா கல்வி கற்றுக்கொண்டிருக்கிறார்கள். ரொம்பப் பெரிய பள்ளிக்கூடத்தைப் போட்டிருக்கிறது இயற்கை. பாடல்களும், பாடப் புஸ்தகங்களும் எண்ணிறந்தன. தெவிட்டா விருந்து குழந்தைகளுக்கு!

''இதெல்லாம் உங்களுக்கு உதவாது. பள்ளிக்கூடத்துக்குள் வாருங்கள், பள்ளிப் பாடப் புத்தகங்களை விரித்து முகத்தில் வைத்துக் கட்டி விடுகிறோம். சரியான கல்வி நன்றாய் வந்துவிடும்'' என்று சொல்லிக் கொண்டிருக்கின்றனவே பள்ளிக்கூடங்கள், என்ன செய்ய அவைகளை?

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்கும் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மிண்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**சுலபமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ வரை சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பலன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிரான பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம்**
**உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

# அந்தி நேரத்து உதயங்கள்

வாஸந்தி

## 3

சீனுவின் இமைகள் மேல் ஏதோ பாரமாய் அமர்ந்திருந்தன. இமைகள் சுயமாய் மேலே எழும்புவது அசாத்திய காரியமாகப் பட்டது. கையினால் பாரத்தை அகற்றலாம் — முடியவில்லை. கைகளின் மேலும் ஏதோ அமர்ந்திருந்தது. ஓ. உடம்பின் ஒவ்வொரு அணுவும் அல்லவா ஏதோ பாரத்தின் அடியில் சிக்கிக் கொண்டிருக்கிறது!

நெற்றிப் பொட்டிலிருந்து பின் மண்டை வரை பல ரத்த நாளங்கள் சுரீரென்று வலித்தன. மிக மிகப் பிரயாசைப்பட்டு ஹரி கண்களைத் திறந்தான். புருவங்களிலிருந்து ரணமாய் வலித்தது.

என்ன ஆகிவிட்டது நமக்கு? அவனுக்குச் சுற்றுப்புறம் பழக்கமாகச் சிறிது விநாடிகள் பிடித்தன.

எங்கே வந்திருக்கிறோம்?

மெல்ல மெல்ல அறிவு இயங்க ஆரம்பித்தது. அவன் படுத்திருந்த கட்டில் ஒரு மூலைச் சதுரத்தில் இருந்தது. தனி அறை மாதிரி ஒரு பிரமையை ஒரு துணி ஸ்க்ரீன் ஏற்படுத்திற்று. பக்கத்திலிருந்த இடைவெளியில் வேறு கட்டில்கள் இருப்பது தெரிந்தது. ஓ. இது ஒரு ஆஸ்பத்திரியா?

கமானி ஆடிட்டோரியத்துக்கு விரைகையில் நமக்கு ஏதோ ஏற்பட்டிருக்க வேண்டும். நேற்று இன்று?

சட்டென்று அவனுக்கு மாயாவின் நினைவு வந்தது. மாயா காத்திருப்பாளே, அவளுக்குத் தகவல் தெரிவிக்க வேண்டுமே?

அவன் தலையைத் தூக்கப் பார்த்தான். தசைகளை லேசாக அசைக்கக் கூட முடியவில்லை. அவனுக்குத் திகைப்பேற்பட்டது.

என்ன ஆகிவிட்டது நமக்கு? எங்கெங்கோ குரல்கள் கேட்டன. விசுக் விசுக்கென்று ஃபினைலினால் தரையைத் துடைக்கும் ஓசை, வேகமாக நடக்கும் பூட்ஸ், ஷூ ஒலிகள்... ஹிந்தியிலும் ஆங்கிலத்திலுமாகக் குரல்கள். ஆனால் ஒரு ஈ காக்காய் உள்ளே நுழையவில்லை.

அவனுக்கு ஆத்திரமும் அசதியுமாக ஏற்பட்டது.

எந்த இடத்தில் வந்து மாட்டிக் கொண்டு விட்டோம்?

ஸ்க்ரீன் இடைவெளி வழியாகச் சில கட்டில் கால்கள் தெரிந்தன. மேலே ஃபான் லேசாகச் சுற்றிக் கொண்டிருந்தது. உயரமான ஜன்னல்களிலிருந்து பளீரென்று வெய்யில் உள்ளே நுழைந்து சிமெண்ட் தரையில் சதுரம் சதுரமாக அமர்ந்திருந்தது. காலையின் ஆரம்ப நேரம் இது என்று ஊகித்துக் கொண்டான்.

என்ன ஆஸ்பத்திரி இது? ஒரு நர்ஸ், ஒரு ஆயா இங்கு கிடையாதா?

அடிபட்டு அங்கு படுத்திருக்கும் நிலைமை விட யாரும் பக்கத்தில் இல்லாமல் அனாதரவாகக் கிடப்பதுதான் அவனை அதிகம் பாதித்தது. மாயாவுக்குச்சொல்லி அனுப்பினால் பறந்தடித்துக் கொண்டு வரமாட்டாளா? துடித்துப் போய் இங்கேயே அமர்ந்திருக்க மாட்டாளா?

அவனுக்குத் தாகமெடுத்தது. யார் இருக்கிறார்கள் அருகில் கூப்பிட்டவுடன் ஓடிவர? அவன் 'நர்ஸ்!' என்று கத்தினான். கத்துவதாக நினைத்துக் கொண்டான். குரலே எழும்பி ஒலிக்காதது திகைப்பைத் தந்தது. என்ன ஆகிவிட்டது நமக்கு? பேசும் சக்தி போய் விட்டதோஎன்று ஒரு விநாடி அவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அவன் தன் பலம் கொண்ட மட்டும் 'நர்ஸ்' என்று கத்தினான். குரல் வந்தது லேசாக. ஆனால் மார்புக்கூட்டைப் பிளந்து கொண்டு வந்த மாதிரி மாரெல்லாம் வலித்தது. அசந்து கண்களில் நீர்கட்டி நின்றது.

ஓ. இந்த மாதிரி ஒரு இக்கட்டில் யாராவது நமக்குத் துணை வேணும். ஆதரவாகப் பேசும் வார்த்தைகள் வேண்டும். கனிவுடன் பார்க்கும் பார்வைகள் வேணும். உடனடியாக மாயாவுக்குச் சொல்லி அனுப்ப வேண்டும்.

மாயாவைத் தவிர அந்தரங்கமானவர்கள் யார் இருக்கிறார்கள்? பெற்றவர்கள் இல்லை. கூடப் பிறந்தவர்களும் இல்லை.

## பனியில் மலர்ந்த பூக்கள்



(மஞ்ஞில் விரிஞ்ஞ பூக்கள்-மலையாளம்)

● கோமஸ்வரன் பணிக்கரின் மகள் பிரபாவைப் பார்த்ததும் காதல் பிறந்து விடுகிறது என்ஜினீயர் பிரேம் கிருஷ்ணனுக்கு (சங்கர்). எத்தனை முயன்றும் இணங்காதவளிடம், "ப்ளீஸ் ப்ரபே, என்னை ஒன்னு இஷ்டப்படான் ஷ்ரமிக்கூ... ப்ரபே" என்று மன்றாடுகிறான். பின் பிரபா (பூர்ணிமா ஜெயராம்) மெல்ல சம்மதிக்கிறாள். இடைவேளை வரை ஆடியும் பாடியும் களிக்கிறார்கள்.

'இதோ நான்...' என்று திமர் விஜயம் செய்கிறான் வில்லன் நரேந்திரன். 'நான்தான் பிரபாவின் மாஜிக் கணவன்' என்று சொல்லி இடையில் புக, அது உண்மைதான் என்று பிரபாவும் ஒப்புக்கொள்கிறாள். தன்னிடம் உண்மையை மறைத்ததற்காக அழுது, கோபித்துப் பிரிகிறான் பிரேம். ட்ரான்ஸ்ஃபர் வாங்கி ஊரை விட்டுச் செல்லும் முன் பிரபாவைப் பார்க்கையில் உண்மை எல்லாம் சொல்லிப் பிரேமைச் சமாதானப்படுத்துகிறாள். காதல் கிளிகள் பறந்துவிடும் முன், பெண் கிளியைக் கழுத்தை நெரித்து நரேந்திரன் கொலை செய்கிறான். வில்லனைத் துரத்திச் சாகடித்து பிரேம் மலைச்சிகரிலிருந்து 'ஆசைட் பாயின்'டில் விழுந்து மரிக்கிறான்.

மாநில விருதுகிடைத்திருக்கிறது பூர்ணிமா ஜெயராமிற்கு.—சிறந்த நடிகை. அவருடைய நவின நயன பாவங்கள் இன்னும் கண்ணில் இருக்கின்றன. நரேந்திரனும் வரும் மோகன்லால் ஒரு சாடிஸ்ட்டாய் பிரமாதப்படுத்தியிருக்கிறார். சங்கர், பரவாயில்லை. அழும் போதுதான்... சரி வேண்டாம்.

ஜெரி அமல்தேவின் ட்யூன்கள் மூன்றும் அருமையானவை. எப்பவும் போலவே சிறப்பாய் கொடைக்கானல் அவுட்டோரில் அசத்தியிருக்கிறார் அசோக்குமார்.

படம், பெயரைப் போலவே குளுமையாய் இதமாய் இருக்கிறது.

மலையாள 'ஒருதலை ராகம்'.

—சிந்து-ஜீவா

"நர்ஸ்!"

"ஹலோ! குட்மார்னிங்!"

அவன் சட்டென்று பார்வையைத் திருப்பினான். பக்கத்தில் ஒரு நர்ஸ் நின்றிருந்தாள். பளிச்சென்று சிரித்துக் கொண்டு, கண்களில் கனிவைத் தேக்கிக் கொண்டு.

"எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஹிந்தியில்.

"மிக மோசமாக இருக்கிறேன்!"

அவள் மென்மையாகச் சிரித்தாள். அவனைக் கூர்ந்து பார்த்தபடி கட்டில் கால் புறம் இருந்த அவனைப் பற்றின குறிப்புகள் கொண்ட அட்டையைப் பார்த்தாள். மிக லேசான யோசனைக் கோடுகள் அவள் நெற்றியில் தோன்றி மறைவதை அவன் கவனித்தான். அவள் அடுத்த விநாடி அவனைப் பார்த்துப் பளிச்சென்று சிரித்தாள்.

எத்தனை அழகாக இருக்கிறாள்!

"எப்பொழுது விழித்துக் கொண்டீர்கள் மிஸ்டர் ஹரி?"

"இப்பொழுதுதான். எப்படித் தெரியும் என் பெயர்?"

"அதான் உங்கள் ஜாதகமே இந்த ஷீட்டில் இருக்கிறதே!"

"என் பெயர் எப்படித் தெரிந்தது?" என்றான் மறுபடியும்.

"உங்கள் பர்ஸில் விசிட்டிங் கார்டு இருந்தது. அதைப் பார்த்து உங்கள் கம்பெனிக்குப் போன் செய்தார்கள். அதற்குள் எல்லோரும் வீட்டுக்குப் போயிருந்தார்கள். நேற்றுதான் காலை மறுபடியும் தொடர்பு கொள்ள முடிந்தது."

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

"மூன்று நாளா எனக்கு அடிபட்டது?"

"ஆமாம்."

"ஓ, காட்! இப்பொழுதுதான் எனக்குப் பிரக்ஞை ஏற்பட்டிருக்கிறதா?"

"ஆமாம்."

அவள் ஒரு குழந்தையிடம் பேசுகிற மாதிரி தர்மா மீட்டரை நீட்டியபடி,

"எங்கே இதை வாயில் வைத்துக்கொள்ளுங்கள். பார்க்கலாம்" என்றாள். பலவித கேள்விகள் மண்டையில் எழ தர்மா மீட்டரை வாயில் திணித்துக் கொண்டான். லேசாக டெட்டால் வாசனை அடித்தது. நர்ஸ் அவனுடைய நாடியைப் பிடித்தபடி தன் கைக் கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டு நின்றாள். புன்னகையுடன் அவன் வாயிலிருந்து தர்மா மீட்டரை எடுத்தாள்.

"இருக்கிறதா?" என்று கேட்டான் அவன்.

"எது?"

"ஜுரம்?"

"ஆமாம். 101!"

"எப்பொழுது சரியாகும்?"

அவள் குழப்பத்துடன் அவனைப் பார்த்தாள். பிறகு அட்டையில் குறித்துக் கொண்டே நிதானமாகச் சொன்னாள்:

"ஜுரம் சீக்கிரம் சரியாகிவிடும்."

"எனக்கு என்ன ஆகியிருக்கிறது நர்ஸ்? தலையில் ஏதும் கட்டு இல்லையே?"

"தலையில் இல்லை. ஹெல்மெட்டினால் தப்பியது தலை."

''பின்னே எங்கே? அடி?''

''இடுப்பில், காலில் பிளாஸ்டர் போட்டிருப்பது தெரியவில்லை?''

''ஊஹூம். உங்கள் முகம்தான் தெரிகிறது. கண்ணை வேறு எங்கும் சுழற்ற முடியவில்லை. முகம் மட்டும்தான் எனக்குச் சொந்தம் போல் இருக்கிறது!''

அவள் கனிவுடன் தன் கைகளால் அவன் கைகளைத் தட்டினாள்.

''கொஞ்ச நாட்களில் சரியாகிப் போய் விடும். எங்கே அத்தனை தலை போகிற அவசரத்தில் ஸ்கூட்டரை ஓட்டினீர்கள்?''

''நான் அவசரமாகத்தான் போய்க் கொண்டிருந்தேன். ஆனால் என்மேல் நிச்சயம் தப்பில்லை. டிராஃபிக் ஸிக்னல் கலைந்ததும் கிளம்பினேன். பின்னாலிருந்து ஏதோ வந்து மோதிற்று.''

அவள் அலுவல்களைத் தொடங்கியபடி மெல்லக் கேட்டாள்.

''எங்கே போய்க் கொண்டிருந்தீர்கள்?''

அவன் விவரத்தைச் சொன்னான்.

''ஓ! அந்தப் பெண் நேற்று வந்தாள்.''

அவன் கண்களில் சட்டென்று ஒரு பிரகாசம் தென்பட்டது.

''வந்திருந்தாளா? என்ன சொன்னாள்?''

''என்னுடன் பேசவில்லை. யாருடனோ வந்திருந்தாள். ரொம்பக் கலங்கிப் போயிருந்தாள்.''

அவன் ஒன்றும் சொல்லாமல் ஒரு லேசான திருப்தியுடன் கண்களை மூடிக் கொண்டான்.

''கர்ல் ஃப்ரண்டா?''

''ஆமாம்.''

''என்ன பெயர்?''

''மாயா.''

அவள் மௌனமாக வாயைக் கொப்பளிக்க உதவி முகத்தைத் துடைத்தாள்.

தனக்குத் தெரிந்தவர்களைப் பார்க்க வேண்டும் என்கிற தாபம் அவனுள் வெகு தீவிரமாக எழுந்தது.

''விஸிட்டர்ஸ் நேரம் எப்பொழுது நர்ஸ்?''

இவன்: ''பிரின்சிபாலும் எங்க அப்பாவும் உயிர் - நண்பர்கள். அப்புறம் பிரின்சிபால் சம்சாரமும் எங்க அம்மாவும் அப்படியே! அதே மாதிரி பிரின்சிபால் மகனும் நானும் திக்கெஸ்ட் பிரண்ட்ஸ்...''

அவன்: ''அப்படி இருந்துமா உனக்கு அட்மிஷன் கிடைக்கலே?''

இவன்: ''என்ன பண்றது? பிரின்சிபாலோட கார் - டிரைவரும், எங்க கார் - டிரைவரும் ஜன்ம - விரோதிகளாச்சே!''

— பெ. கலாசாமி

''பத்திலிருந்து பதினொன்று வரை. பிறகு மாலையில் ஐந்திலிருந்து ஆறு. சற்று நேரத்தில் டாக்டர்கள் ரவுண்டுக்கு வருவார்கள். விஸிட்டர்ஸ் உங்களைப் பார்க்க வரலாமா என்று அவர் தீர்மானிப்பார்.''

''ஓ காட்! என்னை யாரும் பார்க்கக் கூடாது என்றால் பைத்தியம் பிடித்துவிடும் எனக்கு.''

''இப்பொழுது நீங்கள் அலட்டாமல் இருப்பது ரொம்ப அவசியம் மிஸ்டர் ஹரி.''

''உங்கள் பெயர் என்ன நர்ஸ்?''

''சாந்தி.''

ரொம்பப் பொருத்தமான பெயர் என்று அவன் தனக்குள் நினைத்துக் கொண்டான்.

''எனக்குத் தாகமாயிருக்கிறது.''

''இப்பொழுது டீ வரும்.''

''முதலில் எனக்குத் தண்ணீர் வேண்டும்.''

அவள், அவன் படுத்த நிலையிலேயே வாயில் நீரை நிதானமாக ஊற்றினாள். இயல்பாகவே சிராக வளைந்திருந்த புருவங்களுக்கு நடுவில் வட்டமாகக் குங்குமம் தெரிந்தது.

''நர்ஸ், நான் பிழைப்பேனா?''

அவள் அதரங்களில் புன்னகை அரும்பிற்று. ''பிழைத்திருக்கிறீர்களே?''

''இன்னும் எத்தனை நாளைக்கு?''

''இன்னும் பல வருஷங்களுக்கு. மிஸ்டர் ஹரி, தன்னம்பிக்கை என்பது ரொம்ப முக்கியம்.''



மனிதன் இறைவன் அருளிய சில உரிமைகளோடு பிறக்கிறான். அரசு என்பது மக்கள் தமது வசதிக்காக உருவாக்கி நடத்திக் கொள்வதுதான்: மக்கள் தாமாக அதற்குக் கொடுக்காத அதிகாரம் எதுவும் அரசுக்கு இல்லை. அந்த உண்மையை ஒருபோதும் மறக்கக் கூடாது.

ரேகன் — சுதந்திரதினச் செய்தியிலிருந்து
ஜூலை 4 1981

''இப்பொழுது என் கண்களை மூட்டும் தான் சுழற்ற முடிகிறது.''

அவள் சிரித்தாள்.

''பின்னே? மூத்தாநாள் 'பெல்லை'க்கு அடியில் மாட்டிக் கொண்டு இன்றைக்கு ராக் அண்ட் ரோல் ஆடுவீர்களா? சற்று நேரம் எந்த வித யோசனையும் இல்லாமல் படுத்திருங்கள். நான் மற்ற பேஷண்டுகளைப்பார்க்க வேண்டும்.''

எந்தவித யோசனையும் இல்லாமல் படுத்திருக்க முடியவில்லை. எந்த அளவுக்கு உடம்பு சேதமாகியிருக்கிறது என்று புரியாத நிலையில் மனசில் கலவரம் ஏற்பட்டது. அந்த நர்ஸ் ரொம்ப மேலெழுந்தவாரியாகப் பேசி மழுப்புகிறாள் என்று தோன்றிற்று. ஆனால் எத்தனை இதமாகச் சிரிக்கிறாள்!

மாயா எப்பொழுது வருவாள்? தனக்கு இந்த மாதிரி ஆனதும் அவள் எத்தனை பதைத்துப் போயிருப்பாள் என்று நினைக்கையில் வேதனையாக இருந்தது.

**டா**க்டர் வந்தார்.

''எப்படி இருக்கிறீர்கள் மிஸ்டர் ஹரி?''

''எப்படி இருக்கிறேன்? நீங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றான்.

''ரொம்ப நன்றாக இருக்கிறீர்கள் என்று சொல்ல மாட்டேன். ஆனால் பிழைத்து விட்டீர்கள்என்பது ஆச்சரியமான விஷயம்.''

''என்னுடைய உறுப்புக்கள் இருக்க வேண்டிய இடத்தில் இருக்கா?''

''இருக்கிறது.''

அவர் அவனுடைய உள்ளங்காலைத் தம்முடைய பேனாவினால் வருடினார். அவன் சொரணை இல்லாமல் இருந்தான்.

''ஆனால்இருக்கவேண்டிய மாதிரி இல்லை.''

''ஃப்ராக்சர் ஆகியிருக்கிறதா?''

''மல்டிபில் ஃப்ராக்சர். இதைப் பற்றியெல்லாம் யோசனை பண்ணிக் கொண்டிருக்காதீர்கள். யூ ஜஸ்ட் ரிலாக்ஸ்.''

அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''ரிலாக்ஸ் செய்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும் இப்பொழுது எனக்கு?''

டாக்டர்கனிவுடன்பார்த்தார். ''மனத்தை இப்பொழுது தளர்த்தி வைத்துக் கொள்ள வேண்டியது மிக அவசியம். சும்மா படுத்திருந்தால் போதாது.''

''இன்னும் எத்தனை நாட்கள் நான் படுத்திருக்க வேண்டும்?''

டாக்டர் சங்கடத்துடன் சிரித்தார்.

''இத்தனை ஃப்ராக்சர்களுடன் வந்து விட்டு அவசரப்பட்டால் முடியுமா? கண்ணை மூடிக்கொண்டு விபத்தில் மாட்டிக் கொண்டு விட்டீர்கள். கண்ணை மூடிக் கொண்டு சில மாசங்கள் படுத்திருங்கள்!''

அவன் தூக்கி வாரிப்போட்டு அவரைப் பார்த்தான்.

அவர் சிரித்தார்.

''டோன்ட் வர்ரி. சரியாகி விடுவீர்கள். உங்களுக்கு இப்பொழுது ரெஸ்ட் மிக முக்கியம்.''

அவன் ஏதோ கேட்க வாயைத் திறந்தான்.

அதற்குள் அவர் வேறு நோயாளியைப் பார்க்கச் சென்று விட்டார்.

சில மாசங்கள்!

டாக்டர் கேலிக்குச் சொல்லி யிருப்பாரா? இதெல்லாம் கேலி செய்யக் கூடிய விஷயங்களா? மனசு விவரங்களை அறியத் துடித்தது. ஆனால் உடம்பு அசத்தலில் கண்கள் அடிக்கடி மூடிக்கொண்டன. அது தூக்கமா மயக்கமா என்று புரியாதநிலையில் இருந்தான். மாலையில் முழுவதும் விழிப்பேற்பட்டு, சாந்தியை விசாரித்ததில் பார்வையாளர் நேரத்துக்கு இன்னும் அரை மணிநேரம்தான் இருக்கிறது என்று புரிந்தது. மனசு ஒரு எதிர்பார்ப்புடன் நிமிர்ந்து நின்றது.

''நான் வீட்டுக்குப் போகிறேன் மிஸ்டர் ஹரி. வேறு நர்ஸ் வருவாள். மாயா வந்தால் உங்களை நிதானப்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று சாந்தி சிரித்தபடி சொல்லிவிட்டுப் போகையில் மனசில் லேசாக உல்லாசம் படர்ந்தது.

மாயா வந்தாள் தென்றல் மாதிரி. கண்கள் அகன்று பார்வையில் அதிர்ச்சியைத் தேக்கி.

குபீரென்று அவனுள் ஒரு பிரவாகம் கிளம்பிற்று. அவனுடைய மாயா.... இன்னும் சில மாதங்களில் வாழ்க்கைத் துணைவியாகப் போகும் மாயா—

அவன் சிரித்தான். ஜோக் அடிக்கப் பார்த்தான். ஆங்கிலத்தில்.

''எனக்கு ஒன்றும் இல்லை மாயா. சரியாகி விடுவேன். தற்சமயம் உன்னை என்னால் மடியில் உட்கார்த்திக் கொண்டு கொஞ்ச முடியாது. அவ்வளவு தான்!''

அவள் அதிர்ந்து போனவள் போல் அவனைப் பார்த்துவிட்டுப் பிறகு பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

''டாக்டரோடு பேசிவிட்டுத்தான் வரேன் ஹரி!''

அவள் குரல் என்னவோ மாதிரி தொனித்தது. பார்வை அவன் மேல் நில்லாமல் நழுவிற்று.

''என்ன சொல்றார்?''

''உனக்கு இனிமேல் இடுப்புக்குக் கீழே கவாதினமிருக்காதாம்!'' (தொடரும்)



**புலி**

அன்பே!  
எரிமலை போல்  
உணர்ச்சிகளை  
நீ  
வைத்திருந்தும்  
வெட்கப் போர்வையைப்  
போர்த்தியிருக்கிறாயே!  
நீ  
பசுத்தோல்  
போர்த்த  
புலி!

- ஸ்ரீ. ஸ்ரீதரன்

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.



2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'




**வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!**



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TM

# அந்தஸ்து எங்கே இருக்கிறது?

மூன்று மணி. உமாவுக்கு ஃபோன் வந்தது.

''ஹலோ....!''

''உமா, பெர்மிஷன் போட்டுட்டு உடனே புறப்பட்டு வா'' — அம்மாவின் குரல்.

''ஏம்மா?''

''அஞ்சு மணிக்கு உன்னைப் பார்க்க மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வரார்ங்க.''

கருக்கென்று நெஞ்சில் தைத்தது உமாவுக்கு. போனில் அம்மாவுடன் எப்படி வாதாடுவது?

''எல்லா ஏற்பாடும் செஞ்சு வச்சுட்டோம். நீ இப்பப் புறப்பட்டால் சரியா இருக்கும். சீக்கிரம் வா.''

ரிசீவரை வைத்து விட்டு உமா ஆசனத்தில் அமர்ந்தாள். நெஞ்சு கனத்தது.

''அம்மா, அஸிஸ்டண்ட் மானேஜர்! கூப்பிடறார்'' ஆபீஸ் பையன் வந்து சொன்னான்.

கதவைத் திறந்து உள்ளே சென்றாள். மேலதிகாரி ஆசனத்தில் சந்திரன். இருபத்தைந்து வயது இளைஞன். பால் வடியும் இனிமையான முகம். அவனைப் பார்க்கக் கூசி உமா தலை கவிழ்ந்தாள்.

''உமா, இன்று உன்னை அம்மாவிடம் இன்ட்ரடியூஸ் பண்ணப் போறேன்.''

''சாரி சார்....'' உமாவின் கண்களிலிருந்து நீர் பொங்கி வழிந்தது.

''ஏன் உமா அழுறே?''

அம்மாவிடமிருந்து போன் வந்ததைத் தயக்கத்துடன் சொன்னாள்.

''இதுக்குத்தானா? முதலில் உன் அம்மா ஏற்பாடு செய்த ஃபங்க்ஷனை முடிச்சுட்டு வா''

''அதெப்படி முடியும்? மனசில் ஒண்ணு வச்சிக்கிட்டு....''

''கல்யாணமே ஆன மாதிரி ஏன் கலவரப்படறே? உன் எண்ணத்தைப் பெற்றவங்க கிட்டத் தெரிவிக்கிறதுக்கு இது ஒரு சான்ஸ். பெர்மிஷன் சாங்ஷன் பண்ணிட்டேன். உடனே புறப்பட்டுப் போ.''

உமா வீட்டுக்கு வந்தாள்.

''யார்ட்ட கேட்டுப் பெண் பார்க்க வரச் சொன்னீங்க?'' என்று அம்மாவிடம் வெடித்தாள்.

''பெத்தவங்க நாங்க. உனக்குக் கல்யாணம் முடிச்சு வைக்க உன்னிடமே அனுமதி கேட்கணுமா?''

''நான் படிச்சிருக்கேன். ஆபீஸ்லே வேலை பார்க்கிறேன்...''

''அதனால் நீ விவரம் தெரிஞ்சவ. நாங்கள்ளாம் உன் உரிமையில தலையிடக் கூடாது. அப்படித்தானே சொல்றே?''

''கல்யாணி மணி அஞ்சாகப் போகிறது. மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வந்துடுவாங்க. உமாவுக்குச் சீக்கிரம் டிரஸ் பண்ணி விடு.'' மனைவியை அவசரப்படுத்தினார்.

தந்தையின் எதிர் நின்று பேச உமாவுக்குத் துணிவில்லை. கல்யாணி உமாவைச் சமாதானம் செய்து அழைத்துச் சென்று அவளை அலங்கரித்துத் தயார்ப் படுத்தினாள்.

பெண் பார்க்கும் நிகழ்ச்சி முடிந்தது. பையன் சாதாரண கிளார்க்தான். ஐநூறு ரூபாய் சம்பளம். பையனின் குணம் விசேஷமானது என்று பலர் சிபாரிசு செய்திருந்தனர்.

பையனுக்கு உமாவைப் பிடித்து விட்டது. நகையோ வரதட்சிணையோ இயன்றதைச் செய்யலாம் என்று சொல்லி விட்டான். நாள் பார்த்து முகூர்த்தம் வைப்பதாக உறுதி செய்யப்பட்டது.



எம்.கே.சாங்கரன்

''நம்ம அந்தஸ்துக்கு மாப்பிள்ளே குறைவாத் தோணுது'' — கல்யாணி சிறிது குறைப் பட்டாள்.

''அந்தஸ்தா? அது எப்படி இருக்கும்?'' என்று சேகர் நக்கலாகக் கேட்டார்.

''கல்யாணி, நம்ம பொண்ணுக்கு வாழ்வு அமைச்சுக் கொடுக்கணும். பையனுக்கு அந்தத் தகுதி இருக்கு. நாம் வசதியா இருந்ததை நினேச்சா நம்ம பெண்ணுக்கு இந்த ஜன்மத்தில் கல்யாணம் செய்துவைக்க முடியாது.''

''முதல்ல உமா மனசு என்னன்னு கேளுங்க. அவ வேறென்னவோ நினேக்கிற மாதிரி தெரியுது...''

சேகர் உமாவிடம் வந்தார். அவள் கண்ணீர் வடிப்பதைக் கண்டு திகைத்து விட்டார்.

''என்ன உமா....''

உமா குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித் தாள்.

அவளேப் பார்க்கச் சேகருக்குத் தங்கை அருணுவின் நினேவு வந்தது. அருணு உமாவைப் போலவே இருப்பாள். அன்று அருணு இப் படித்தான் அழுதாள்.

அருணு அவருக்கு ஒரே தங்கை. அவளிடம் எத்தனே அன்பு வைத்திருந்தார்? பருவ மடைந்த பெண்கள் வெளிவராத அந்தக் காலத்தில் தங்கையைப் படிக்க வைக்கணும் என்று தாய் தந்தையரிடம் வாதாடி அருணு பி. ஏ. படிக்கக் காரணமா யிருந்தார்.

சுற்று வட்டார மாளிகை வாசிகள், பெரும் தனக்காரர்கள் பலர் அருணுவைப் பெண் கேட்டுப் படை எடுத்துக் கொண்டிருந்தனர். தங்கையின் அதிர்ஷ்டத்தை எண்ணிப் பூரித்துக் கொண்டிருந்தார்.

கல்லூரிப் படிப்பு முடிந்து வரும் தங் கையை வரவேற்க சேகர் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார். அருணுவுடன் சிரித்து அளவளாவியவாறு இறங்கிய அவனேக் கண்ட தும் துணுக்குற்ருர்.

அவன் சின்னசாமியின் மகன் கணேசன். சேகரின் ரத்தம் கொதித்தது. கணேசனின் தாய் தந்தை மட்டுமல்ல, பாட்டன் முப்பாட்டன் கூட பரம்பரை பரம்பரை யாகத் தங்கள் குடும்பத்தினருக்கு ஏவின தைச் செய்யும் கூலிக்காரர்கள். குடி யிருக்க வீடு கிடையாது. ஓலேப் பறை குடிசைதான். இன்று கணேசன் காலேஜில் படித்து விட்டதால் தங்களுக்குச் சமமாகி விடுவானு?

''அருணு, நம் அந்தஸ்தென்ன? கூலிக்காரப் பய மகன் கணேசன் கூட நீ வரலாமா?''

''அண்ணு, கணேசனுக்கு உள்ள மதிப்பு பற்றி உனக்குத் தெரி யாது. ஸ்டேட்ல பஸ்ட் ஸ்டூடன்ட்! காலேஜ் வட்டாரத் தில் கணேசன்னு போதும் இரேட், ப்ரிலியண்ட் இன் டலிஜெண்ட்னு பேரெடுத் திருக்கிருர்!''

கணேசனேப் பற்றி அருணு பெரிய லெக்சர் அடித்தாள். அந்த ஒரு நாளோடு அருணு நிற்கவில்லே. கணேசன்தேடி அவன் இருப்பிடத்துக்கே போக ஆரம்பித்தாள்.

நயந்தும் மிரட்டியும் பார்த்தாயிற்று. அருணு அழுது அடம் பிடித் தாள். யாரும் எதிர் பார்க்கவில்லே. அருணு கணேசனுடன் டவுனுக்



குப் போய்ப் பதிவுத் திருமணம் செய்து கொண்டு வந்து நின்றாள்.

''வாச நடையிலே காலை வைக்காதே!''

கைப்பிடித்தவனோடு வீட்டுக்கு வந்த அருணாவைச் சேகர் தெருவிலேயே நிறுத்தி விட்டார்.

தாய் தந்தையர் கூட மணமான அவர்களை ஏற்றுக்கொள்ளத் தயாராயினர். சேகர் ஆத்திரம் தீரவில்லை.

அன்று அழுது அடம் பிடித்த அருணாவின் முகம் உமாவிடம் காணப்பட்டது. கண்ணீர் வடிக்கும் மகளையும் யோசனையில் இருக்கும் கணவனையும் பார்த்த கல்யாணி சேகரைத் தனியாக அழைத்துச் சென்றாள்.

''கல்யாணி, இந்தப் பெண் பிள்ளைகளைக் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து அதுக்கு நல்லது செய்யணும்னு நினைக்கிறோம். அதுகள் படுத்தற வேதனையோ... என் தங்கச்சி அருணாவை இழந்த வேதனையே எனக்கு இன்னும் தீரலை. உமாவை நினைச்சப் பயமா இருக்கு.''

''உமாவை நான் விசாரிக்கிறேன். தைரியமா இருங்க.''

கல்யாணி உமாவிடம் பேசிவிட்டு வந்தாள்.

''உமாவோட ஆபீஸ் சந்திரன்னுபேராம். அஸிஸ்டண்ட் மானேஜரா இருக்கானும். உமாவைக் கல்யாணம் செய்துக்கறதா சொல்றானும்.''

சேகர் அமைதியாகக் கேட்டார்.

''அவ தலையெழுத்தை நாம ஏன் மாத்தணும்? உன் மகளை வரச் சொல்'' என்றார்.

உமா சந்திரனுக்கு போன் செய்தாள்.

''சந்திரன், அப்பா உங்களைப் பார்க்கணும் என்கிறார். உங்க அப்பாவிடம் கல்யாணம் சம்பந்தமாக இன்றைக்கே பேசணும் என்கிறார்.''

''உடனே அழைச்சுட்டு வா. எங்க வீட்டு வாசல்ல உனக்காகக் காத்திட்டிருப்பேன்.'' சந்திரன் பதிலளித்தான்.

---

தயாரிப்பாளர் : ''நான் எடுத்திருக்கிற படத்தில் ஒரு சீனில் பாருங்க... கதாநாயகி நீச்சல் தொட்டியில் குளிக்கவிட்டிருக்கா... அப்போ ஒரு தேனெப்பாத்துட்டு டக்குனு எழுந்திருக்கிறா... அப்போ...''

நண்பர் : ''சென்ஸார்காரங்க டப்புனு வெட்டிடும் புடுங்க...'' -குருமூர்த்தி



தந்தையுடன்உமாபோனபோது சொன்ன படியே சந்திரன் காம்பவுண்டுக்கு வெளியே நின்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இருவரையும் ஆர்வத்தோடு வரவேற்று மாளிகைக்குள் அழைத்துச் சென்றான்.

சந்திரன் தாயை அழைத்து வந்தான். பட்டுப்புடவைசரசரக்கக் கழுத்திலும் கைகளிலும் அணிகலன்கள் நிறைந்து குலுங்கச் செல்வச் சீமாட்டியாக வந்தாள் சந்திரனின் அன்னை.

அவளைப் பார்த்த சேகர் சட்டெனத் தலையைத் தாழ்த்திக் கொண்டார்.

''அண்ணா, நீங்களா...!''

நீண்ட நாள் பிரிவின் பாசம் பொங்கிப் பெருகியது சேகருக்கு. தங்கையுடன் எப்படிப் பேசுவது? சேகர் தத்தளித்தார்.

உமா சொந்த மாமன்மகள். சந்திரனுக்குப் பூரிப்பு!

அருணாவின் கணவன் கணேசன் எங்கே? சேகரின் கண்கள் தேடின.

''கான்பரன்ஸுக்குப் போயிருக்கார். சென்ட்ரல் மினிஸ்டர்ஸ் கலந்துக்கறாங்க. மாலை வந்துடுவார்!'' அருணா பெருமையிலிரச் சொன்னாள்.

இப்போது சின்னச்சாமியின் மகன் சாதாரண கணேசன் இல்லை. நாடு முழுதும் புகழ் பெற்ற பெரிய பொருளாதார மேதை. டில்லி, கல்கத்தா, பம்பாய் முதலிய நகரங்களில் பேரோடும் புகழோடும் சாதனைகள் புரிந்துவிட்டுத் திரும்பி இருந்தார்.

தேவைக்குமேல் செல்வம் குவிந்துவிட்டது. பெரும் மேதையின் புத்திரன் என்ற செல்வாக்கில் சந்திரனுக்கு இளம் வயதிலேயே உயர் பதவியைப் பெரிய கம்பெனி வலியக் கொடுத்தது.

''அண்ணா, என் புருஷனை நீ குறைச்சு மதிப்பிட்டே. இப்பொழுது நாங்க உன்னை விட எத்தனையோ மடங்கு உயர்ந்துவிட்டோம்!'' அருணா சொல்லாமல் சொல்வது போலிருந்தது.

முள்ளின் மேல் இருக்கிற வேதனை சேகருக்கு. உமா அத்தையிடம் நெருங்க முடியாத மாதிரி ஒதுங்கி நின்றாள். வந்த காரியம் பேசப் படவில்லையே என்ற தவிப்பு சந்திரனுக்கு.

''புறப்படலாமா உமா?''

அவள் 'சரி' என்றாள்.

''அண்ணா! அடிக்கடி வாங்க.'' அருணா வழி அனுப்பி வைத்தாள்.

வீட்டை விட்டு இறங்கிக் கேட்டை நெருங்கும்போது சந்திரன் ஓடி வந்தான்.

''மாமா, கல்யாண விஷயமாய்க் கேட்காமல் போறீங்களே?''

''உன் அம்மாவும் நானும் பெரும் போராட்டத்தில் பிரிந்தவர்கள். இன்று தான் சந்திக்கிறோம். பிறகு பேசலாம்.''

சந்திரன் கேட்டோடு நின்று விட்டான். சேகர் உமாவுடன் விரைந்து நடந்தார்.

வீட்டுக்கு வந்ததும் சேகர் அருணாவைச் சந்தித்ததைச் சொன்னார்.

''கல்யாண விஷயமாக் கேட்டீங்களா?'' என்றாள் கல்யாணி.

# திருமகள் திருமணத் திட்டம்
# ஓர் இலட்சியத் திட்டம்
## உங்கள் வாழ்க்கையின்
## இலட்சியத்தை
## நிறைவேற்றிடுவீர்.



''சிறுமியாக உலவி வரும் உங்களது செல்வ மகள் மணமகளாக அமர வேண்டிய நாள் வெகுதூரத்தில் இல்லை. அவளது திருமணத்தை. அவளது மனதுக்கேற்ப சிறப்பாக நடத்த வேண்டியது உங்கள் கடமையல்லவா? அதுதானே உங்கள் கனவும் மகிழ்ச்சியும் கூட.''

உங்களது கனவை நனவாக்கி மகிழ்ச்சியளிக்கும், எங்களது திருமகள் திருமணத்திட்டம்!
திட்டம் எளிது! பலனோ அரிது!!

விபரங்களுக்கு எங்களது கிளை ஒன்றுடன் தொடர்பு கொள்ளுங்கள்:-

தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், மகாராட்டிரம், மேற்கு வங்காளம், மற்றும் கேரள மாநிலங்களில் கிளைகள்.



**கரூர் வைஸ்யா பாங்க் லிட்.**

பதிவு அலுவலகம் : கரூர், தமிழ்நாடு.

K.V. ராகவாச்சாரி,
சேர்மன்



''நானுக் கேட்க மாட்டேன். கேட்கவும் என்னுல் முடியாது.''

''பெண்ணைப் பெத்தவங்க நாம். தன் மானம் பார்த்தால் முடியுமா? நீங்க கேட்டிருந்தால் அருணு சம்மதிச்சிருப்பாள்.''

''அதுதான் இல்லே.'' உமா பளிச்சென்று சொன்னுள்.

''அம்மா, சந்திரன் வீடு தேடி நாங்க ஏன் வந்தோம் என்கிறதை சந்திரனுடைய அம்மா தெரியாமலா இருப்பாங்க? சந்திரன் படற அவசரத்துக்குத் தாயிடம் கண்டிப்பாகச் சொல்லி இருப்பார். கல்யாணம் பத்தி அவங்க மூச்சே விடலில்லே.''

நிச்சலனமாய் உமா சொல்வதைச் சேகர் ஆச்சரியத்துடன் பார்த்தார்.

''ஒருவேளை அருணு அண்ணு கேட்கட்டுமே பதில் சொல்லலாம் என்று இருந்திருக்கலாம். என்னைப் போல் அவளுக்கும் தன் மானம் இருக்காதா? கவலைப்படாதே உமா! நானே என் தங்கையிடம் வலியக் கேட்கிறேன்.''

''அப்பா, நீங்க தலே குனிஞ்சு நான் வாழணுமா? நீங்க கேட்கவே வேண்டாம். நடக்கிறது எதுவானுலும் நடக்கட்டும்.''

**ம**று நாள் உமா ஆபீசுக்குப் புறப்பட்டு வாசலில் வந்தாள். மோட்டார் பைக்கில் சந்திரன் அதி வேகமாக வந்து இறங்கினுன்.

''அப்பா, சந்திரன் வந்திருக்கார்'' – சந்திரனை உமா வீட்டுக்குள் அழைத்து வந்தாள்.

''மாமா, எனக்கும் உமாவுக்கும் இன்றைக்கே கல்யாணம் நடந்தாகணும்.''

படபடப்புடன் வந்த சந்திரனைச் சேகர் உட்கார வைத்தார்.

''ஏன் இவ்வளவு அவசரப்படறே சந்திரா?''

''நேற்று வீட்டில் பெரியசண்டை.உமாவை எடுக்க அப்பா சம்மதிக்க மாட்டேங்கிருர்.''

''காரணம்?''

''எல்லாம் ஸ்டேட்டஸ் பிராப்ளம்தான். சென்ட்ரல் மினிஸ்டர் ஒருவருடைய பெண்ணை எனக்கு ஏற்கனவே பேசி முடிச்சிட்டாராம். அவர் அந்தஸ்துக்கு அது தான் சரிப்படுமாம்.''

''உன் அம்மா என்ன சொல்ருள்?''

''அம்மாவும் அப்பாவுக்கு ஒத்துப் பாடுருள். உங்க பழக்க வழக்கங்கள் எங்களுக்கு ஒத்துப் போகாதாம். அகில இந்திய லெவல்ல அப்பா உயர்ந்த பொசிஷன்ல இருக்காராம். அதுக்குத் தகுந்த மாதிரி வாழ்க்கையை அமைச்சுக்கிடணுமாம். உங்களுக்குப் பண உதவி செய்து உமாவைப் பெரிய இடமாப் பார்த்துக் கொடுத்து விடலாம் என்கிருன்.''

சேகரின் நெஞ்சு கடித்தது. தாங்கிக் கொள்ளச் சிரமப்பட்டார்.

''சந்திரா, ஒரு காலத்தில் அந்தஸ்து வெறியில் தலே கால் தெரியாமல் குதிச்சவன் நான். வீடு வாசல் போய், பிழைப்புக்காக ஊர் ஊரா அலேந்ததில் அந்தஸ்து ஒண்ணு இருக்கிறதை மறந்தே போய் விட்டேன். என் தங்கை அருணு? அந்தஸ்தைத் துச்சமா மதிக்க வசதி நிறைஞ்ச குடும்பத்தை உதறிக் கணேசனைக் கைப்பிடித்தாள். இன்றைய நிலேயில் அவளே அந்தக் கொள்கையில் மாறி அந்தஸ்தை அனுசரிக்க ஆரம்பித்துவிட்டாள். அவளுக்கு முன் நான் அந்தஸ்து குறைந்தவனுகி விட்டேன். அந்தஸ்துன்னு என்ன அர்த்தம் என்கிறதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லே.''

''மாமா, அவங்கவங்க நிலேமைக்குத் தக்கபடி அந்தஸ்துக்கு அர்த்தம் கற்பிச்சிக்கிடருங்க. எனக்கு அது பற்றிக் கவலே இல்லே. இன்றைக்கே உமாவைக் கல்யாணம் செய்து அவங்க முயற்சியை முறியடிக்கணும். ஏற்பாடு செய்யுங்க மாமா.''

''சந்திரா, நான் அப்படிச் செய்தால் எனக்கும் அருணுவுக்கும் வித்தியாசமில்லாமல்

''உன்னைப்போல் அதிர்ஷ்டசாலி யார் இருக்கிருர்கள்?''
''எதனுலே அப்படிச் சொல்கிருய்?''
''காதலித்தவளை மணந்து கொண்டிருக்கிருயே...!''
-பெ. கலாசாமி



போய்விடும். என் பெண்ணைக் கள்ளத் தாலி கட்டி அனுப்பற நிலேமைக்கு என் அந்தஸ்து குறைஞ்சு போயிடல்லே. தயவுசெய்து நீ போய்விடு.''

''உமாவை ஏமாத்திடக் கூடாது என்கிறதுக்காக வந்தேன். நீங்களே உதறும்போது எனக்கென்ன? மந்திரி மகளைக் கல்யாணம் முடிக்கத் தீர்மானிச்சுட்டேன். கல்யாணத்துக்கு வந்து சேருங்க.''

சந்திரன் விருட்டென்று போய்விட்டான்.

கண்ணீரோடு அருகில் வந்தாள் உமா.

''உமா, உன்னே ஏமாத்திட்டேனு?''

''இல்லே அப்பா. நீங்க சொன்னதுதான் சரி. நம்மைக் குறைத்து மதிக்கிறவங்க குடும்பத்தில்வாழுறநான்குறைந்தவள் இல்லே.''

உமா தனக்கும் அந்தஸ்து உண்டு என்பதைத் தந்தையிடம் உறுதிப் படுத்தினுள்.





# சரிதா ஏன் தயங்கிறார்?

இவ்வொரு முறையும் ''பழைய வீட்டுக்குப் போகலாமா?'' என்று நான் சரிதாவைக் கேட்கும்பொழுது சரிதா தன் அம்மாவைத் தயக்கத்துடன் பார்க்க, அம்மா என்னிடம் ''போவலாம் சார், கொஞ்சம் பொறுத்துக் குங்க'' என்பார். எனக்கு ஒன்றுமே புரிய வில்லே. 'ஏன் இப்படி நடந்து கொள்ளுகிறார்கள்?'

ஒரு வழியாக அவர்களைச் சேத்துப்பட்டிலுள்ள அவர்களது பழைய வீட்டுக்கு அழைத்துச் சென்றேன். உள்ளே நுழைந்ததும், சரிதாவின் தாயாருடைய கண்கள் கலங்கிவிட்டன. ''என்ன ஆயிற்று உங்களுக்கு?'' என்று நான் அனுதாபத்தோடு விசாரித்தேன்.

''இதுக்குத்தாங்க சலர், நான் வரமாட்டேன்னு சொல்லித் தள்ளிப் போட்டுக்கிட்டே போனேன், அப்போ நாங்க பைனான்ஸ் கம்பெனி வைத்திருந்தோம். படம் எடுத்தோம். அப்புறம் எல்லாமே மாறிட்டுத்து. பைனான்ஸ் கம்பெனி நஷ்டத்தைக் கொடுக்க ஏகப் பிரச்னைகள். இன்று சரிதா திரை உலக நட்சத்திரமாக வளர்ந்து விட்ட போதிலும் கூட நாங்கள் இவ்வளவு பெரிய வீட்டில் இல்லே என்பது உங்களுக்குத் தெரியும். பழைய நினைவுகள் துயரத்தை ஏற்படுத்தாமலிருக்கத் தான் இங்கு வருவதையே தவிர்க்க முயன்றேன்'' என்றார் சரிதாவின் தாயார்.

இவற்றை யெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் துள்ளல் நடையுடன் நேரே சமையல் அறைக்குச் சென்றார் சரிதா. ''அப்பொழுது எனக்கு ஏழு வயசிருக்கும் சலர் சார்! இந்த மேடை அளவுக்குக் கூட வளர்ந்திருக்க மாட்டேன். நான், என் தங்கை, என் தம்பி மூணு பேரும் அடிச்ச லூட்டி இருக்கே கொஞ்ச நஞ்சமில்லே! பண்டிகை நாட்கள் வந்தால் ஒரே குஷி. ஸ்கூல் லீவு. அம்மா பட்சணங்கள் செய்வாங்க. கேசரியோ, மைசூர் பாகோ ஊறி இது மேலே தான் வைப்பாங்க, ஆறணும்றதுக்காக. நான் உடனே தங்கையையோ, தம்பியையோ விட்டு அம்மாவைக் கூப்பிடச் சொல்வேன். ''அம்மா'' என்று அவர்கள் அலறினதுதான் தாமதம். அம்மா என்னவோ ஏதோன்னு சமையலறையை விட்டு வெளியே போவாங்க. இங்கே கொஞ்சம் கேசரி உள்ளே போகும். கத்திய வாய்களுக்கும் கையிலே கொஞ்சம் பங்கு எடுத்துப்பேன்! இப்படி இருந்த காலம் எவ்வளவு இனிமையா இருந்துச்சு!

''நாங்க குழந்தைகள் எல்லோரும் ஒண்ணு இந்த பெட்ரூம்லேதான் படுத்துப்போம். என் தங்கை விஜயாவை ஏப்ரல் ஃபூல் செஞ்ச ஞாபகம் இப்பக்கூடப் பசுமையா இருக்கு! பாக்கி நாட்களிலே ஏமாந்தாலும் ஏப்ரல் முதல் தேதி அன்று மாத்திரம் அவள் யாரிடமும் ஏமாற மாட்டாள். முன்னெச்சரிக்கையோடு இருப்பாள். அவளை ஏ.எஃப். ஆக்கணும்னு நான் முடிவு செஞ்சேன். ராத்திரி திடீர்னு முழிப்புக் குடுத்தது. முதல் தேதி காலே மணி நாலு. விஜயாவை எழுப்பினேன். ''யாரோ கதவைத் தட்டற மாதிரி இல்லே?'' என்றேன். கூர்ந்து அவளும் கவனிச்சா.. ''டக்டக் டக்''னு சத்தம் கேட்டது. இவளுக்குப் பயம் வந்துருச்சு. திரும்ப ஐந்து நிமிஷத்துக்குப் பிறகு அதே சத்தம். பயந்துண்டே பெட்ரூம் கதவைத் திறக்கவும், அந்தச் சத்தம் பாதியிலே நிக்கவும் சரியா இருந்தது. ''அம்மாவைக் கூப்பிடலாமாடி?'' இது விஜயாவின் கேள்வி. ''இல்லே இல்லே! நீ படுத்துக்க, நான் பார்த்துக்கறேன்'' என்று பெரிய மனுஷி போல் நான் சொன்னேன். ''ஏப்ரல் ஃபூல்'' என்று கத்திக் கொண்டே தம்பி உள்ளே ஓடிவந்தான்!

✱ மொட்டை மாடிக்குப் போவோமா..



✖ பூஜை அறையில் ஒரு நிமிஷம் தியானம்

அதட்டியபடியே நான் குழந்தைகளை அழைத்துச் செல்ல மேலே வருவேன். இந்தத் தண்ணீர்த் தொட்டிக்குள் சரிதா ஒளிந்துகொள்வாள். மேதான் இருக்கிருளாக்கும் என்று நான் ஏமாந்து இறங்கிப் போவேன்'' என்ருர் சரிதாவின் தாயார். இதற்குள் மரத்தி



✖ எட்டும் உயரத்தில்....



✖ எட்டாத உயரத்தில்...

''என் ஏற்பாட்டின்படி உன் பக்கமிருந்தே வாசல் கதவைத் தட்டினவன் அவன்தான்!''

இந்தக் கதையைக் கூறியபடியே நடந்த சரிதா, பூஜை அறையைத் தாண்டும்போது பக்தி சிரத்தையாகக் கும்பிட்டபடி நின்று விட்டார். ஒரு நிமிஷம் கழித்துத் தியானம் கலைந்து பின்கட்டுக்கு வந்தார். மாமரத்தில் ஒரு மாங்காய் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து உயர எம்பிக் குதித்து அதைப் பறிக்க முயன்ருர்.

''எட்டாத மாங்காய்க்குக் கொட்டாவி விடப் போறதில்லே ஸார்! மொட்டை மாடிக்குப் போகலாம். அங்கே நிறைய மாங்காய் கைக்கெட்டும்'' என்று சொல்லி என்னையும் அழைத்துக் கொண்டு மேலே ஏறினுர். மொட்டை மாடிக்குச் செல்லும் வழியில் சிறு பெட்டி மாதிரி ஒரு அறை. ''இங்குதான் மணிக் கணக்காக விளையாடுவோம், விளையாட்டுச் சாமான்களை வைத்துக் கொண்டு'' என்ருர்.

'''விளையாட்டுப் போதும். கை காலைக் கழுவிக்கொண்டு படிக்க உட்காருங்க' என்று

✖ பொம்மைகளுடன் விளையாடிய நாட்களின் இனிய நினைவுகள்...

லிருந்து சிலமாங்காய்களைப் பறித்துக்கொண்டு வந்தார் சரிதா.

''மாங்காய் மட்டுமல்ல; இனி உங்க லட்சியமெல்லாம் சுலபமாகக் கைக்கெட்டப் போகுது பாருங்க'' என்று நான் கூற,

''சாரோட வாக்கு அப்படியே பலிக்கட்டும்'' என்று சரிதாவின் அம்மா மகளுக்குத் திருஷ்டி கழித்தார்!

—சலன்

புகைப்படங்கள்: யோகா





ரே கமிஷன்
டிஸ்மிஸ் ஆகும் சாத்தியம்
எம் ஜி ஆர்



எப்படித்தான் சமாளிக்கப் போறாரோன்னு நினைச்சேன் — புழு பூச்சாண்டி காட்டியதும் அலேக்காத் தூக்கிட்டாரே!
எதிர்ப்பு வேகம்







அடேடே, உங்களுடைய புது கண்டுபிடிப்பா? கரண்ட் இல்லாமியே லைட் எரியுமாமே, அந்தக் கருவியா?
ராஜீவ்



இல்லே... பதவி இல்லாமலே அதிகாரம் குவிக்கும் கருவி!







மூணு பேர்ல
இரண்டு பேர்
மாட்டிக்கிறலே
போதும்

இந்திரா

ரே கமிஷன்

ஊழல் ஆட்சி

அதிமுக

ரூபாய்

ஜனதா கூட்டணி

திமுக

# இரவல் உறவுகள்

## ராஜேஷ்குமார்



டாக்டரம்மாள் இருண்டுபோன முகத்தோடு அறையை விட்டு வெளியே வரும்போதே எனக்குப் புரிந்து விட்டது. இந்தத் தடவையும் அந்தப் பிஞ்சு கருகிவிட்டது என்கிற விஷயம்.

''ஸாரி மிஸ்டர் பசுபதி... இந்தத் தடவையும் சின்ன உயிரை என்னால் காப்பாற்ற முடியவில்லை.'' நிஜமான சோகத்தோடு சொன்னாள் டாக்டரம்மாள்.

நான் வறண்ட புன்னகையொன்றை இதழ்களில் தவழ விட்டேன்.

''பரவாயில்லை டாக்டர். அடுத்த தடவையாவது அந்தப் பாக்கியத்தை ஆண்டவன் எனக்குத் தரட்டும்...''

டாக்டரம்மாள் நான் சொன்னதைக் கேட்டுப் பெருமூச்சொன்றை விட்டாள்.

''ஸாரி மிஸ்டர் பசுபதி! இந்த ஜென்மத்தில் உங்களுக்கு அந்தப் பாக்கியம் இல்லை''

''டாக்டர்!'' — நான் ஏறக் குறைய அலறினேன்.

டாக்டரம்மாள் மெல்லிய குரலில் சொன்னாள்: ''உங்க மனைவியின் கர்ப்பப் பை இந்தப் பிரசவத்தோடு மூன்று தடவை குழந்தையைத் தாங்கியிருக்கிறது. எல்லாமே இறந்து பிறந்த குழந்தைகள். அதனால கர்ப்பப் பை சேதமாயிருக்கு. அதை மருந்தாலே சரிப்படுத்தணும். அப்படிச் சரிப்படுத்தினாலும் கூட கர்ப்பம் ஆகாம இருக்கிறது நல்லது. மீறி ஆனா பிரசவ நேரத்தின்போது பெரிய உயிரா? சின்ன உயிரா என்ற மரணப் போராட்டம் வந்துடும்... பி கான்ஷியஸ்!''

டாக்டரம்மாள் சொல்லிவிட்டுத் தன் அறையை நோக்கி நடந்தாள்.

நான் இக்பிரமை பிடித்து நின்றேன்.

எவ்வளவு நேரம்?

தெரியவில்லை.

யாரோ என் தோளைத் தொட்டார்கள். திரும்பினேன்.

தோளில் துண்டு அணிந்த அந்த நடுத்தர வயது மனிதர் நின்றிருந்தார். நான் அவரை முன் பின் பார்த்ததுகூட இல்லை. அவர் மெதுவான குரலில் கேட்டார்:

''குழந்தை தவறிடுச்சு போலிருக்கே?''

'ஆமாம்' என்கிற பாவனையில் தலையசைத்தேன்.

''டாக்டரம்மா சொன்னாங்க... உங்களைப் பத்தின எல்லா விவரமும் சொன்னாங்க. உங்களுக்குப் பிறக்கிற குழந்தைங்க எல்லாம் இறந்து பிறக்கிறதாகவும், இனிமே உங்க மனைவி கர்ப்பம் தரிக்கிறது ஆபத்துன்னும் சொன்னாங்க....''

நான் அவர் பேசுவதையே பார்த்துக் கொண்டிருந்தேன். யார் இந்த மனிதர்? எதற்காக இவ்வளவு பரிவாய் விசாரிக்கிறார்? எனக்குப் புரியவில்லை.

''உங்க மனக் குறையைத் தீர்த்து வைக்கிறதுக்காக வந்தேன்.'' — அவர் மெல்ல புன்னகைத்தார். அதில் கனமான சோகம் தெறிப்பதை நான் கவனிக்கத் தவறவில்லை.

''என்னோட மனக் குறையை நீங்க தீர்த்து வைக்கிறீங்களா? புரியலியே!''

''எம் பேரு தனகோடி. போத்தனூர்ல தான் குடியிருக்கேன்... மூணு நாளைக்கு முன்னாடி என்னோட மனைவியை இந்தக் க்ளினிக்குக்குத்தான் பிரசவத்துக்குக் கூட்டி வந்தேன். சுகப் பிரசவந்தான். பெண் குழந்தை பிறந்தது. ஆனா திடீர்னு என்னோட மனைவிக்கு பிட்ஸ் அட்டாக் ஆகி சீரியஸ் ஆகி விட்டது. ரெண்டு நாளா டாக்டருங்க ரொம்பவும் முயற்சி பண்ணினாங்க. அவளைக் காப்பாத்தறதுக்கு..ஆனா முடியல்லே... நேத்தைக்கு மத்தியானம் அவ கண்ணை மூடிட்டா''

நான் அதிர்ந்தேன். ஒன்றும் பேசத் தோன்றாமல் அவர் முகத்தையே பார்த்தேன்.

கண்களில் துளிர்த்த நீரை மேல் துண்டால் ஒற்றிக் கொண்டே பேசத் தொடங்கினார்.

''நேத்தைக்கு மத்தியானத்திலிருந்தே அந்தக் குழந்தையை என்னால சமாளிக்க முடியல்லை... எனக்குச் சொந்த பந்தம் யாரும் கிடையாது. அவ வழியிலேயும் யாரும் கிடையாது. அதனால குழந்தையை யார் கிட்ட ஒப்படைக்கிறதுன்னும் எனக்குத் தெரியல்ல. குழந்தைங்க இல்லாத நீங்க என்னோட குழந்தையை ஏத்துக்கிட்டா எம் மனசுக்கு நிம்மதியா இருக்கும்...''

நான் சந்தோஷத்தில் தத்தளித்தேன்.

அவர் என் கைகளைப் பற்றிக் கொண்டார்.

''டாக்டரம்மாவோட பேசி ஒரு முடிவு எடுத்த பின்னாடித்தான் உங்க கிட்ட சொல்றேன். குழந்தையை எடுத்து நீங்க வளர்க்க ஆரம்பிச்ச பின்னாடிஉங்க வாழ்க்கையில நான் குறுக்கிட மாட்டேன். ஏன்னா ஆபீஸ்ல மாற்றல் வாங்கிக்கிட்டு கல்கத்தா பக்கம் போயிட்டப் போறேன். இந்த ஊர்ப் பக்கம் நான் திரும்பவே மாட்டேன்....''

அவர் உறுதியான குரலில் சொன்னார்.

''குழந்தை எங்கேங்க?'' — நான் ஆர்வமாகக் கேட்டேன்.

''வாங்க காட்றேன்...'' — அவர் உள்ளே அழைத்துக் கொண்டு போனார். ஏழாம் நெம்பர் தொட்டியில் உறங்கிக் கொண்டிருந்த குழந்தையைக் காட்டினார்.

குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. நல்ல சிவப்பு. தலை நிறைய கருகருவென்று முடி. இரண்டு பக்கங்களிலும் இரண்டு ரோஜாக்களை வைத்தது போன்ற கன்னங்கள். சிமிழ் போன்ற உதடுகள்.

குழந்தையை வாரி எடுத்தேன். அப்பப்பா என்ன இதமான பாரம்!

முகத்தைச் சுளித்துச் சிணுங்கியது குழந்தை.

''ஒரு சின்ன வேண்டுகோள்!'' என்றார் அவர்.

''என்ன?''

''குழந்தைக்கு 'அம்பிகா'ன்னு பெயர் வையுங்கள். ஏன்னா அம்பிகா என்னோட மனைவி பேர்.''

நான் நீர் நிறைந்த கண்களோடு தலையாட்ட—

அவரும்நீரால் கனத்த விழிகளைத் துடைத்தபடி குழந்தையின் கன்னங்களை வருடிவிட்டு அறையை விட்டு வெளியேறினார்.

இதுவரை நீங்கள் படித்தது பதினாறு வருடங்களுக்கு முந்தின நிகழ்ச்சி.

இன்றைக்கு?

அம்பிகாவைப் 'பெண் பார்க்க' வருகிறார்கள்.

மாப்பிள்ளைப் பையனுக்கு ரயில்வேயில் உத்தியோகம். பெற்றவர்களுக்கு இரண்டாவது பையன். பார்க்க லட்சணமாகவும் இருப்பதாகப் புரோக்கர் சொல்லியிருந்தார். பேரும் அழகான பேர் — மது.

மாலை நான்கு மணிக்கு அவர்கள் வருவதாக ஏற்பாடு.

சொன்ன படியே வந்தார்கள். பவ்யமாய் வரவேற்றேன்.



மாப்பிள்ளைக்கு அப்பா ஆஜானுபாகுவாய் அங்கவஸ்திரம் தோளில் புரள ஒரு ஜமீன்தாரின் தோரணையோடு வந்தார். மாப்பிள்ளைக்கு அம்மா மகாலட்சுமியாய் இருந்தார்: மாப்பிள்ளைப் பையன் தளதளவென்று ஊட்டிப்ளம்ஸ் பழம் மாதிரி இருந்தான்.

என் மனசுக்குள் ஓர் உதைப்பு.

அம்பிகாவின் பூர்வீகத்தைப் பற்றி இவர்களிடம் சொல்லவாமா வேண்டாமா? சொன்னால் அதை எப்படி ஏற்று ஜீரணம் செய்து கொள்வார்கள்? ஆஸ்பத்திரியில் அநாதையாய்க் கிடந்த பெண்ணை எடுத்து வளர்த்து எங்கள் தலையிலா கட்டப் பார்த்தீர்கள் என்று சண்டைக்கு வந்தால்?

'வேண்டாம்.. சொல்லாதே' என்றது மனம்.

ரவா கேசரியையும் வெங்காய பஜ்ஜியையும் ரசித்துச்சாப்பிட்டார் மாப்பிள்ளைக்கு அப்பா. அம்பிகாவிடம் சகஜமாகப் பேசினார். சிரிக்கச் சிரிக்கப் பேசினார். காப்பி ஒன்றரை டம்ளராய்க் கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்.

நான் முள்ளின் மேல் உட்கார்ந்தமாதிரி அவஸ்தையோடு நெளிந்தேன். பார்ப்பதற்கு நல்லவராய் இருக்கிறார். உண்மையைச் சொல்லிவிடலாமா?

''வேண்டாம்... சொல்லாதே!'' — எச்சரித்தது மனம்.

''எங்களுக்குப் பொண்ணு ரொம்பவும் பிடித்தம். மத்த விஷயங்களைப் பேசிடலாமா சம்பந்தி'' — என் கையைப் பற்றிக்கொண்டார் மாப்பிள்ளையின் அப்பா.

நான் கஷ்டப்பட்டுப் புன்னகைத்தேன்.

அவர் என் முகத்தைக் கூர்ந்து பார்த்து விட்டார். சாமர்த்தியக்காரர்!

''ஏன் என்னவோ மாதிரி இருக்கீங்க?''

நான் நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துண்டால் ஒற்றிக் கொண்டே சொன்னேன்:

''ஒண்ணுமில்லே. உங்க கிட்ட தனியாக் கொஞ்சம் பேசணும்!''

''தனியாவா?''

''ஆமாம்.''

''எதைப் பத்தி?'' என்று கேட்ட மாப்பிள்ளையின் அப்பா சட்டென்று முகம் மாறியவராய், ''ஓ! அதைப் பத்தியா? நானே உங்ககிட்டப் பேசலாம்னு இருந்தேன்'' என்றார்.

நான் திடுக்கிட்டுப் போய் அவரைப் பார்த்தேன்.

அவர் புன்னகைத்தபடி என் கையைப் பற்றினார்.

''இப்படிக் கொஞ்சம் வெளியே வாங்க பேசலாம்....''

வாசல் தாண்டி மல்லிகைப் பந்தலுக்குக் கீழே வந்து நின்று கொண்டோம்.

அவர் குரல் தழுதழுக்கப் பேச ஆரம்பித்தார். ''இந்த விஷயத்தை நியாயப்படி நாங்க புரோக்கர் மூலமாச் சொல்லியிருக்கணும். உங்க கிட்ட நேரிலேயே சொல்லிடலாம்னு என்னோட மனைவி அபிப்பிராயப்பட்டா. அதனால்தான் இப்போ சொல்றேன். என்னிக்குமே இந்தப் பையன் மதுவை நாங்க அந்நியமா நினைத்ததே யில்லே. என்னோட முதல் பையனுக்கு என்னென்ன உரிமை இருக்கோ அத்தனை உரிமையும் இவனுக்கும் இருக்கு. இருபத்தஞ்சு வருஷத்துக்கு முன்னாடி எங்க வீட்டுத் திண்ணையிலே பச்சைக் குழந்தையா யிருந்த மதுவை எவளோ ஒருத்தி போட்டுட்டுப் போயிட்டா. 'வறட் வறட்'டுன்னு கத்தற குழந்தையோட சத்தம் கேட்டு வந்து பார்த்தோம். சொர்ண விக்கிரகம் மாதிரி இருந்த குழந்தையைப் பார்த்துத் திகைச்சுப் போனோம். போலீஸ்ல சொல்லிக் குழந்தையோட தாயைக் கண்டு பிடிக்க முயற்சி செஞ்சோம். முடியல்லே. குழந்தையை அநாதை விடுதியில் சேர்க்கவும் மனசு வரல்லே. நாங்களே வளர்க்க ஆரம்பிச்சோம். இதுநாள் வரைக்கும் மதுவோட மனசுல தான் ஒரு அநாதைங்கிற உணர்வு ஏற்பட்டு விடாதபடி நடந்து வர்றோம். தயவு செஞ்சு இந்த அற்பக் காரணத்தை ஒரு பொருட்டா நினைச்சுக்கிட்டு உங்க மகளைக் கொடுக்க மறுத்திடாதீங்க... அவன் ரொம்பவும் மனசு உடைஞ்சு போயிடுவான்... ப்ளீஸ்!''

அவர் என் கைகளைப் பற்றிக் கொண்டு கெஞ்சக் கெஞ்ச—

எனக்கு அழுவதா சிரிப்பதா என்று புரியாமல் திணறினேன்.

---



''இந்தச் சூட்கேஸை ஸ்டேஷனுக்கு வெளியே கொண்டுபோக எவ்வளவு கேக்கறேப்பா?''

''நாலு ரூபாய் கொடு சாமி!''

''பார்த்தியா கமலா! நாலு ரூபாய் கேக்குறான். நான் ஒண்ணரை ரூபாய்தானே கேட்டேன். குடுத்தின்னா நானே வெளியே கொண்டுவந்து வச்சுடுறேன்!''

- அ. இராமதாஸ்

அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## திருத்தணிகை



**ஆடி பரணி — 25-7-81**

**ஆடி கிருத்திகை — 26-7-81**

தெப்பம்

26—7—1981 முதல் 28—7—1981 வரை

---

வை. சுப்பையன்,
உதவி ஆணையர் / நிருவாக அதிகாரி

பி. ஜோதி,
அறங்காவலர் குழுத்தலைவர்

---

அறங்காவலர்கள்

1. எம். முனுசாமி, 2. எல். சண்முகம், 3. சி. இராசகோபால், 4. கே. கிருஷ்ணன்



# நீயா?

சந்திரநாத்

5

"மகேஷ்! வாட் ஹாப்பண்ட் டு யூ?"— நடேஷ் அருகில் வந்து தோளைப் பிடித்து உலுக்க, பிரக்ஞை பெற்று—

"நம்ப நீலா பெரிய ஆபத்திலே மாட்டிக் கிட்டிருக்கா நடேஷ்" என்று ஆரம்பித்து எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான் மகேஷ்.

"இவ்வளவுதானே —ப்பூ" என்று ஊதினான் நடேஷ். "இதற்கா பயந்துவிட்டாய்? கவலைப்படாதே நீலாவுக்கு ஒன்றும் நேராது" என்றான்.

"எவ்வளவு 'கூலாக'ச் சொல்கிறாய் நடேஷ்! நாளை இந்நேரம் அவள் மெட்ராஸ் எல்லையைக் கடந்து ரோடு வண்டியில் போய்க் கொண்டிருப்பாள் நடேஷ்" — ஆத்திரத்துடன் கூறினான் மகேஷ்.

"நான் என் நண்பரான ஐ. ஜி.யைப் பார்த்து, மெட்ராஸிலிருந்து இரண்டு நாட்களுக்கு எல்லா ரூட்டிலேயும் செக்கிங் போடச் சொல்லிவிட மாட்டேனா?" என்றான் நடேஷ்.

"அவர்கள் அவளை இங்கேயே கொன்று விட்டால்?"

"மாட்டார்கள். எந்த ஆசாமியும் அநாவசியமாகத் தன் கையைக் கறையாக்கிக் கொள்ளவே மாட்டான்" — நடேஷ் எழுந்து சென்று ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு உலாவ ஆரம்பித்தான்.

"இதோ பார் மகேஷ்! நாம் துப்பறிபவர்கள். உணர்ச்சி வசப்பட்டு எதையும் பார்க்கக் கூடாது. எதையும் அலசி ஆராய்ந்து பார்க்க வேண்டும். இப்போது பார். ஒரு பெண்ணைக் கடத்திக் கொண்டு போய் விற்கிறவர்கள், அந்தக் காரியம் முடியும் முன், அவளுடைய உறவினர்களுக்கோ நண்பர்களுக்கோ, போலீசுக்கோ தெரிவிப்பார்களா? தெரிவித்தால் அவர்களுடைய காரியம் கெட்டுவிடாதா?"

"இவன்தான் காரணத்தைச் சொன்னானே?"

"நிச்சயமாக அது நிஜமான காரணமாக இருக்க முடியாது. அவன் அவளை உண்மையில் காதலித்தவனாக இருந்து, அவளையும் உன்னையும் பழி வாங்க நினைத்தால் எப்பொழுது அவளைப் பற்றி உன்னிடம் சொல்வான் தெரியுமா? அவளைக் காளி மாதாவுக்குப் பலி கொடுத்து விட்டதாகச் செய்தி வந்த பிறகுதான் சொல்வான். அதற்கு முன் சொல்லவே மாட்டான்."

மகேஷ் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"இந்த ஆள் முட்டாளாக இருக்க மாட்டான், அதுவும் நிச்சயம். இவன் நீலாவைக்

கடத்திப் போய் யாருக்காவது விற்றிருக்க லாம். இரண்டாயிரம் வாங்கி யிருக்கலாம். ஆனல் ஒன்று தெரிகிறது. நீலாவை வாங்கினவர்களையும் இவனுக்குப் பிடிக்கவில்லை. அவர்களையும் வஞ்சம் தீர்த்துக் கொள்ள விரும்புகிருன். அதற்கும் காரணம் இருக்கும். அவர்கள் இவனை ஏமாற்றி யிருக்கலாம். மூவாயிரம் தருவதாகச் சொல்லி இரண்டா யிரம்தான் தந்திருக்கலாம்.''

''நான் நாலாயிரம் தருவதாகச் சொன் னேனே?''

''அதை அவன் நம்பவில்லை. உன்னை நெருங்குவது அபாயம் என்று பயந்திருக்க லாம். நாலாயிரம் தருவதாகக் கூறி அவனை வரவழைத்து நீ அவனைப் போலீசில் பிடித்துக் கொடுத்து விட்டால்? — ஆகவே கிடைத்த இரண்டாயிரமே போதும் என்று நினைத்திருக் கலாம். அதே சமயம் உன்னைக் கொண்டு நீலாவை வாங்கினவர்களைத் தண்டிக்கவும் விரும்பி யிருக்கலாம்.''

மகேஷ் — ''நீலாவை வாங்கிய பெண்ணின் அடையாளங்களை யெல்லாம் சொன்னுனே!''

''உன்னைத் திசை திருப்புவதற்காக இருந் தால் அவை பொய்யாக இருக்கலாம். தண் டிக்கும் நோக்கம் உடையதாக இருந்தால் உண்மையாக இருக்கும். ஆனல் தண்டிக்கும் நோக்கம் உடையவனுக இருந்தால் அந்த மராட்டிக்காரியின் இருப்பிடத்தையும் சொல்லி யிருக்க வேண்டுமே'' என்ருன் நடேஷ்.

''அது இவன் இருப்பிடமாகவே இருந் திருந்தால்...''

''அதுவும் நிச்சயமாக இருக்காது. இந்த மாதிரி ஆசாமிகள் எங்கே யாவது குச்சுக்களில்தான் குடியிருப்பார்கள். இவர்கள்



வெறும் புரோக்கர்கள். இவர்களுக்கு வீடு வாசல், குடும்பம் எல்லாம் இருக்கும். ஆனால், தொழில் அட்ரஸ் இருக்காது. பார்ட்டியை எங்கேயாவது ஒரு வீட்டை வாடகைக்குப் பிடித்து அங்கேதான் தங்க வைப்பார்கள். பார்ட்டி தங்குகிற வீடு அநேகமாக ஊருக்கு வெளியேதான் இருக்கும். சரக்கைச் சுலபமாகக் கொண்டு வர, கொண்டு போக வசதியாக இருக்கும். ஆகவே நீலாவை அவர்கள் வைத்திருக்கும் இடம் ஊருக்கு வெளியேதான் இருக்க வேண்டும்.''

''இப்போது நாம் என்ன செய்வது?''

''நீ சொல்லு. என்ன செய்யலாம்?''

''நாம் உடனே நீலாவைத் தேடத் தொடங்க வேண்டியதுதான்.''

''இவ்வளவு பெரிய சிட்டியில் எத்தனையோ காலனிகள் பரவிக் கிடக்கின்றனவே. இதை முழுக்கத் தேடி முடிக்க முப்பது நாள் ஆகிவிடாதா?''

''எத்தனை நாள் ஆனாலும் தேட வேண்டியதுதான்.''

''அப்படியானால் உன் மதுரைப் பயணம்?''

''கான்சல் பண்ணிவிட வேண்டியதுதான். நீலாவை ஆபத்தில் விட்டு விட்டு நானெப்படி நடேஷ் வெளியூர் போகிறது?''

''பைத்தியக்காரா! இவ்வளவுதானா உன் புத்திசாலித்தனம்?'' — நடேஷ் சிரித்தான். ''ரொம்ப சுலபமாக எதிரியின் வலையில் விழுந்து விட்டாயே!''

''என்ன நடேஷ் சொல்றே?''

''நீலாவைக் கடத்திக் கொண்டு போய் மறைத்திருப்பது கூட, நீ அவளைத் தேடிக் கொண்டு சென்னையிலேயே இருந்து விட வேண்டும். — மதுரைக்குப் போகாமலிருந்து விடுவாய் என்று எதிர்பார்த்துச் செய்ததாக ஏன் இருக்கக் கூடாது?''

மகேஷ் திடுக்கிட்டான்.

''ஓ— அப்படியா?''

''இதோ பார் — நீலாவுக்கு எதிரிகள் யாருமே கிடையாது. தனக்கு ஒரு அத்தை மகன் இருப்பதாக அவள் சொன்னதே கிடையாது. அப்படி ஒருவன் இருந்திருந்து, அவளைக் காதலித்திருந்தால் இத்தனை மாசங்களில் ஒரு தடவையாவது அவளிடம் ஆபீசுக்குப் போன் செய்து அவளிடம் பேசி இருப்பான். அப்படி ஒரு 'கால்' கூட வந்தது இல்லை. போன் செய்யாமல், வெளியில் தொந்தரவு கொடுத்து வந்திருந்தாலும், அதன் எதிரொலி கட்டாயம் நீலாவிடம் தென்பட்டிருக்கும். மேலும் நிஜமான அத்தை மகன், என்னதான் கோபம் இருந்தாலும் தன் உறவினளையே நரபலி கொடுக்குமளவுக்குப் போக மாட்டான்.''

''பின்னே இந்த ஆள் யார்?''.

''எனக்குத் தெரியாது. யாராக இருந்தாலும் நமக்கு ஒன்றுதான். அத்தைமகன், மாமன் மகள், காதல் ஏமாற்றம், பழிக்குப் பழி என்பதெல்லாம் வெறும் கதை. நம்மைத் திசை திருப்பி விடச் செய்யும் முயற்சி. இந்த உப கதை, கமல் என்கிற பெருங் கதையின் கிளைக் கதையாகக் கூட இருக்கலாம். ஏன், கமல்நாத்துடன் நீ மதுரைக்குப் போகக் கூடாது என்று விரும்புகிறவரின் நடவடிக்கையாகவும் இருக்கலாம். என் ஊகம் சரியானால் நீலா பற்றி நீ துளிக் கூடக் கவலைப்பட வேண்டாம். அவளை மதுரை ரயில் கிளம்பும்வரை வைத்திருந்து பார்த்துவிட்டு விட்டு விடுவார்கள். முனை முறியாமல் அவள் திரும்பிவிடுவாள்.''

''நடேஷ்... என்ன இருந்தாலும் நீ சீனியர்!''

''புகழாதே அப்பா.''

''உனக்கு மூளை ஜாஸ்திதான்.''

''பிரயோஜனம் இல்லை அப்பா. உலகம் ஒப்புக்கொள்ளவில்லை, அப்பா — 'நடேஷ் பி. ஏ.' என்கிறதப்பா...'' — சிரித்தான். பிறகு, ''நீயும் கெட்டிக்காரன்தான். கொஞ்சம் அவசரக் குடுக்கை. அதோடு நீலா மீது உள்ள ஆசையும் சேர்ந்து கொண்டு 'கண்ணை' மறைத்து விட்டது. அவ்வளவுதான்'' என்றான்.

''எனக்கொன்றும் நீலாமீது ஆசையில்லை'' என்றான் மகேஷ்.

''பையா மறைக்காதே! ஐயாவின் துப்பறியும் கண்களுக்கு எதுவுமே தப்பிவிட முடியாது.... இந்தப் போனி சொல்கிறதே கதை கதையாய்...''

மகேஷ் நீலாவை இப்போது முழுமையாக உணர்ந்தான்.

''சும்மா வேஷம் போடாதே. கல்யாணம் ஆகிவிட்ட கிரகஸ்தன் என்கிற போலிப் போர்வையிலே அழகான கிளியைக்கோட்டை விட்டு விடாதே. என்றாய் மைபாய். ஆனைப் பட்ட முருகனே 'டபிள்ஸ்' வைத்துக் கொண்டிருக்கிறானே'' — சிரித்தான்.

மகேஷ் உருகி, ''இத்தனை நாளும் நான் நீலாவின் மனசைத் தெரிந்து கொள்ளாத முட்டாளாக இருந்து விட்டேன், நடேஷ்'' என்றான்.

''அதற்காக இப்போது அவளைத் தேடிக் கொண்டு பட்டணத்திலேயே ''டேரா''ப் போட்டு விடாதே. ஐந்நூறு ரூபாயையும் திருப்பிக் கொடுக்க வேண்டி விருக்கும். நான் பார்த்துக்கொள்கிறேன், அவளை. நாளை மறுநாள் நீ இங்கே மதுரையிலிருந்து வரும்போது இன்னொரு செட் போனியுடன் உன்னை வரவேற்கும்படி செய்கிறேன், போதுமா?''

''அப்ப — நான் கிளம்புகிறேன்'' — எழுந்தான் மகேஷ்.

''கவலை இல்லாமல் போய் வா. கமல் வீட்டுக்கு மாறு வேஷத்தில் போ. நீ சென்னையில் இருப்பதாகவே அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கட்டும். யாராவது உனக்கு இங்கு

**ஆபீஸ் காலண்டர் முதல் தேதி காட்ட லஞ்ச் டயத்தில்**

அவன்: ''உன் டிபன் பாக்ஸின் மேல் தட்டில் சி. ஹோ. ஊ. சு. ச. ப. நே. வீ. வ. சேனு ஒரு துண்டுச் சீட்டு இருக்கே என்னடா அர்த்தம் அதுக்கு?''

இவன்: ''சினிமா ஹோட்டல்னு ஊரைச்சுற்றாமல் சம்பளப் பணத்துடன் நேரே வீடு வந்து சேரவும்னு என் மனைவி சுருக்கமா எழுதி அனுப்பிச்சிருக்கா!''

— உ. ராஜாஜி

போன் செய்தால் உன்னைப் போலவே பேசி நான் சமாளிக்கிறேன். – ஓ.கே?''

''ஓ.கே.'' கோட்டைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டுப் பின் பக்கத்து டிரஸ்ஸிங் அறைக்குப் போனான். அடுத்த எட்டாவது நிமிஷம் அந்த அறையிலிருந்து ஒரு 'ஸேட்' வேஷத்தில் வெளிப்பட்டான்.

''நடேஷ்ஜீ! அச்சி ஹை?'' என்றான்.

''பகுத் அச்சா ஹை'' என்ற நடேஷ், ''தும் நாம் கியாஜி?'' என்றான்.

''ஹேமந்த் லால் – ஃபேமஸ் ஃபிலிம் டிஸ்ட்ரிபியூட்டர்.''

''அச்சா.....அச்சா...ப்ரொடியூஸர்களிடம் எப்போதும் ஒரு கைத்துப்பாக்கியும் இருக்க வேண்டும்.... உன் துப்பாக்கி–''

''எடுத்துக் கொண்டு விட்டேன் நடேஷ்.''

''கமல்நாத் வீட்டிலேயே கூட அவருடைய எதிரிகள் இருக்கலாம். அங்கே இருக்கிற நேரத்தைக் கெட்டிக்காரத்தனமாகப் பயன்படுத்திக்கொள். கமல்நாத்துக்கு நெருக்கமாக இருக்கிற ஒவ்வொருவர் பற்றியும் தகவல் சேகரி. அநேகமாக செக்ரட்டரி, மானேஜர், அல்லது பார்ட்னர் நிச்சயமாக இருப்பார். அவர்களை 'வாட்ச்' பண்ணினாலே போதும். நிறையத் தகவல்கள் கிடைத்து விடும்.''

''விசாரிக்கிறேன்.''

''முக்கியமாக கமல்நாத், அல்லது அவருடன் நெருங்கிப் பழகுகிற ஆளுக்கு இந்த நகரத்தில் வேறு எங்கெல்லாம் வீடுகள் இருக்கின்றன என்று தெரிந்துகொள். நீலா அந்த வீடுகளில் ஒன்றில் இருக்கலாம். குறிப்பாக ஏதாவது தகவல் கிடைத்தால் உடனே எனக்கு போன் பண்ணு. நான் உடனே போய் 'ஸர்ச்' பண்ணுகிறேன்.''

''கமல்நாத்துக்கு ஒரு மனைவி இருக்கிறாளா என்றும் நான் பார்க்க வேண்டும்.''

''பேஷாகப் பார். அழகாக, சொத்தைப் பல்காரியாக இல்லாமல் இருந்தால், அவளுக்கு ஒரு முத்தம் கூடக் கொடுத்துவிட்டு வா; எனக்கு ஆட்சேபனை இல்லை. ஆனால் அதற்கு அவசியமே இல்லை. அப்படி ஒருத்தி இருக்க மாட்டாள். நீ வேணுமானால் பாரேன்'' என்றான் நடேஷ்.

''அவனைக் கமல்நாத் இன்றிரவு கொலை செய்யப் போவதாக போனில் உண்மை விளம்பி சொன்னானே!''

''போய்ப் பார். கமல் வீட்டில் அவருக்கு அப்படி ஒரு மனைவி இருந்தால் அதன் பின் அது பற்றிப் பேசுவோம்'' என்றான் நடேஷ்.

''பை-பை'' – மகேஷ் கீழே இறங்கிச் சென்றான்.

(தொடரும்)

# மயில்



ரியலிஸப் போர்வைக்குள் பதுங்க முயலும் பாத்திரமில்லாக் கதை. ரோடு போடும் தொழிலாளர்களின் வாழ்க்கைப் பின்னணியில் கதை சொல்லப்படுகிறது. சோரம் போன அம்மாவுக்குத் திருமணம் செய்து வைக்கப் பாடுபடும் புதுமைப் பெண், கதாநாயகி மயில். அம்மாவின் குழந்தையைத் தன் குழந்தை என்று பகன்று பழி ஏற்று. (ஆமாம், இது தேவைதானா?) கடைசியில் ஏதோ செய்யப் போவதாகப் பயமுறுத்துகிறாள். திட்டம் இட்டுகிறாள். கடைசியில் எல்லாம் பொல பொல.

ஒவ்வொரு கூலிப் பெண்ணையும் தடவி, தடவி சாலைத் தொழிலாளர்களின் வாழ்க்கையைக் கொச்சைப் படுத்தும் மேஸ்திரிதேங்காய் ஒவர். ரோடு என்ஜின் டிரைவரும் எப்போதும் தண்ணீரில் இருப்பவருமான சத்தாரிடம் சத்துள்ளது.

| | | |
|---|---|---|
| கேமராவுக்கு | ரூ. | 0–30 |
| நடிப்புக்கு | ரூ. | 0–15 |
| இசைக்கு | ரூ. | 0–10 |
| டைரக்ஷனுக்கு | ரூ. | 0–25 |
| ஆக மொத்தம் | ரூ. | 0–80 |
| கொடுப்பது | ரூ. | 2–90 |
| கிடைப்பது | ரூ. | 0–80 |
| தண்டம் | ரூ. | 2–10 |

ரூபா மதிப்பை உயர்த்திக்கொள்ள அரும் பாடுபட்டிருக்கிறார். பாஷையும்மேக்கப்பும் அடிக்கடி மாறிவிடுகிறதே Why? பால்கார வேடம் ராஜேஷுக்குக் கன கச்சிதப் பொருத்தம்.

படத்தில் அயராமல் உழைப்பது ரங்காவின் கேமரா தான். 'பசி' மயக்கத்தில் டைரக்டர் துரை ரோடு போட்டிருக்கிறார். தார் காயாமல் இழுக்கிறது.

– நளினி சாஸ்திரி

கல்லில் மலர்ந்த காவியம்: 2

# தாடிக் கொம்பு

திண்டுக்கல்லுக்கு மிக அருகில் உள்ள இடம் தாடிக்கொம்பு. அங்குள்ள பெருமாள் கோயிலில் உள்ள உன்னதமான சிற்பக் களஞ்சியம், ஒரு காலத்தில் உன்னத நிலையில் இருந்ததை நினைவூட்டுகிறது. சிற்ப சாஸ்திர விற்பன்னர்களே வியக்கும் வண்ணம் மேன்மையுடன் தத்ரூபமாகக் காணப்படுகின்றது. அங்குள்ள ரதி மன்மதன் சிற்பங்கள் அற்புதமான படைப்புக்கள்.

**ரதி தேவி:**

இவள் மன்மதனின் தேவி. ரதி என்ற சொல்லுக்கு ஆசையை உண்டாக்குபவள் என்பது பொருள். மன்மதனை ஊக்குவிப்பவள் இவளே! இவள் வாகனம் அன்னம்; இவள் இடக்கையில் உள்ளது கரும்பு வில். அவ் வில்லின்நாண் மலர்களால் ஆனது. பாணப் பிரயோகம் செய்த நிலையில் வலக்கரம் விளங்குகிறது. அது என்ன பாணம் என்பது பார்ப்பவர் களின் கற்பனைக்கு உரியது என்று சிற்பி கருதினன் போலும்! அதோடு அஸ்திரம் எங்கே பட்டது என்று தேடுகின்றன ரதியின் கண்கள்!



## மன்மதன்:

இவன் காதற் கடவுள். இவனுக்கு காமன்,
காமவேள், வேனிலான், மதனன், மாறன்,
அருங்கன் முதலிய 33 பெயர்கள் உள.
இவன் திருமாலின் மானச புத்திரன்.
இவனுக்கு தென்றல்—தேர்; கிளி—குதிரை;
இருள்—யானை; தாழை மடல்—வாள்;
கரும்பு—வில்; கரும்பு—நாண்; தாமரை,
மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம்
ஐந்து மலர்களும் அஸ்திரங்கள்.
வலது கைக்கு மேலே காணப்படும் ஐந்து
மலர்களும் பஞ்ச பாணங்கள் எனப் பெறும்.
சிவபிரானால் எரியுண்டு உருவிலியான
இவன் மக்கள் கண்ணுக்குப் புலப்பட
மாட்டான். ஆனால் ரதியின் கண்களுக்கு
மட்டும் புலப்படுவான். ஆகவேதான் ரதிக்கு
எதிரில் இவனைச் சித்திரிக்கும் மரபு ஏற்
பட்டுள்ளது. இவனை கிரேக்கர் ஈரோஸ்
(EROS) என்பர்; ரோமானியர் க்யூபிட்
(CUPID) என்பர்.

நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச்
சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது
இந்த கலைப் பொக்கிஷங்கள். இன்றைய
மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி
ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்
தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி,
வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம்
கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப்
படைப்பின் அடிப்படை தூய்மை என்னும்
பக்தியும், நேர்மை என்னும் சக்தியும்தான்!
அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது
லக்ஷ்மி மில்ஸ். "செய்யும் தொழிலே
தெய்வம்; அதில் நேர்மையே நமது செல்வம்"
என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை
புரிவதையே தலையாய கடமையாகக்
கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!



**லக்ஷ்மி**
**மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**





# ஆசைக்கு வெட்கம் உண்டு

அரவிந்தன்

'தர்மசங்கடம் — தர்ம சங்கடம்' என்கிறார்களே அதன் சரியான அர்த்தம் தெரியாதவர்கள் அப்போது தாமுவைப் பார்த்தால் போதும்! உண்மையில் அவனுக்கு அன்றைக்கு ஏற்பட்டதற்குப் பெயர்தான் ''தர்மசங்கடமான நிலை!''

தாமு — ஓர் அழகான இருபத்தேழு வயது வாலிபன். பி.எஸ்.சி. பட்டதாரி. பிளாஸ்டிக் தட்டுகள், பேஸின்கள், குடங்கள், தயாரிக்கும் ஒரு சேட் கம்பெனியில் அவன்தான் ஆல் இன் ஆல்! ''ஸ்வஸ்திக் எண்டர்பிரைஸர்ஸ்'' என்று இரண்டரை அடிக்கு முக்கால் அடி உயரத்தில் ஜே. வி. ரோடு முனையில் ஒரு போர்டு தொங்கும்.

'சேட்' ரொம்ப அழுத்தக்காரன்.

மூணில் ரெண்டு கறுப்பு!

வெளுப்பிலேயே தினசரி பதின்மூன்று பதினறு லட்சம் வியாபாரம் பதிவாகும்.

தாமு அங்கே வேலைக்குச் சேர்ந்த புதிதில் ரொம்பத்தான் நியாய உணர்வுக்கு மதிப்புக் கொடுக்கிறவனுகவும் உண்மையான பாரத புத்திரனுக இருக்க வேண்டும் என்கிற ஆசை உடையவனுகவும் இருந்தான். சேட்டின் கருப்பு பிஸினஸ் ஆரம்பத்தில் அவனுக்கு எரிச்சலாகவே இருந்தது.

பாவி — இப்படி அரசாங்கத்தையும் அதிகாரிகளையும் ஏமாத்துகிறயே நீ உருப்படுவாயா? குஜராத்தில் இருக்கும் உன் ஒரே மகள் என்னைப் போல ஒரு 'அன்றுடம் காய்ச்சி'யை இழுத்துக் கொண்டு ஓடிவிடப் போகிறுள் பார்! யாருக்காக இப்படி பொய்யும் புனைசுருட்டும் செய்து சொத்துச் சேர்க்கிறய்? யாருக்காக அதிகாரிகளையும் அரசாங்கத்தையும் ஏமாற்றி இந்தச் சொத்தைச் சேர்க்கிறய்?

ஒரு நாள் திடீரென்று 'கொட்டாவி' விட்டாயானல் உன் வெள்ளி அரைஞாணைக் கூட அறுத்துக் கொண்டுதான் வீட்டை விட்டு உன் பிணத்தை வெளியே அனுப்புவார்கள்.

நாற்றைம்பது ரூபாய் சம்பளம்—

பிச்சைக் காசு—

இன்னும் கொஞ்சம் சேர்த்துத்தான் கொடுத்தால் என்ன? உன் கையில் எந்தத் தேள் வந்து கொட்டிவிடும்?

கோபமும் திட்டும் குறைவில்லாமல் இருக்குமே தவிர, சேட்டுக்குக் கனவிலும் துரோகம் நினைத்ததில்லை தாமு.

அதுவும் அந்த வருஷம் தீபாவளிக்குப்பிறகு சேட் புதுக் கணக்குப் போடும்போது தாமுவின் சம்பளத்தை அவனே எதிர்பார்க்காத அளவாக அப்படியே இரட்டிப்பாக்கிய பிறகு தாமு 'சேட்'டுக்கு நிச்சயமாய் பரி பூரண விசுவாசியாகிப் போனுன்.

அங்கே அவன்தான் 'ஆல் இன் ஆல்!'

அவன்தான் மானேஜர்.

'போரா'க்களைக் கைவண்டியில் ஏற்றி வெளியூர்களுக்கு அனுப்ப லாரி புக்கிங் ஆபீஸுக்கு ஓடுகையில் அவன்தான் கிளார்க்!

ஓயாமல் வரும் டெலிபோன்களுக்குப் பதில் சொல்லும் போது அவன் டெலிபோன் ஆபரேட்டர்.

அன்றைய கணக்கு வழக்குகளைச் சரிபார்த்து இரவு பத்தரை மணிக்கு மேல் சேட்டிடம் கணக்கை ஒப்படைத்து விட்டுக் கிளம்பும்போது அவன் கணக்குப்பிள்ளை.

மறுநாள் காலை பத்து மணிக்கு பேங்க் வாசலில் நிற்கும்போது அவன் ஆபீஸ் பையன்!

அங்கு எல்லாம் அவனே!

சேட்டுக்கும் அவன்மீது நல்ல நம்பிக்கை இருந்தது.

நம்பிக்கை என்றல் அல்ப சொல்பமான நம்பிக்கை இல்லை — அபார நம்பிக்கை.

குஜராத்தில் கல்லூரி விடுமுறை என்று அப்பாவிடம் கொஞ்ச நாள் செல்லமாக இருந்துவிட்டுப் போக வந்திருந்த அவருடைய ஒரே செல்லப் பெண் மிருதுளாவை தாமுவோடு பெங்களூரைச் சுற்றிப் பார்க்க அனுப்புகிற அளவுக்கு அவன் மீது அபரிமிதமான நம்பிக்கை உண்டு 'சேட்'டுக்கு!

கண்டிஞல் ரத்தம் தெறிக்கிற மாதிரி அப்படி ஒரு சிவப்பான — ஒல்லியானுலும் அழகான ஒல்லியாய் —

ரசிக்கத் தகுந்த மாதிரியான ஒல்லியாய் — ஒரு ரோஜாப் புஷ்பம் போல இருந்த மிருதுளாவுடன் பெங்களூரைச் சுற்றி வருவது தாமுவுக்கும் ஒரு சந்தோஷமான அனுபவமாகவே தோன்றியது.

இங்கேதான்—

இந்த இடத்தில்தான்—

சரியாக இந்த இடத்தில்தான்—

ஆரம்பத்தில் சொன்ன தர்மசங்கடமான நிலை ஆரம்பமாயிற்று தாமுவுக்கு! — அதுவும் அவன் மிகவும் சங்கோஜி.

அதுமட்டுமல்ல. ஊரில் — தமிழ் நாட்டில்— திருச்சிக்குப் பக்கத்தில் ஒரு சிற்றூரில் அவனுக்காக அவன் அத்தை பெண் அருணா காத்திருக்கிறாள்.



உண்மையில் காத்துத்தான் இருக்கிறாள்.

பிறந்ததுமே அவர்கள் இருவரும் ஒருவருக்கு மற்றவர் என்பது தீர்மானமாகிப் போன விஷயம்.

ஒவ்வொரு வீட்டிலே பன்னிரண்டு வயதுக்கும் பதின்மூன்றுக்கும் பெண்கள் வயதுக்கு வந்து நிற்க, அருணா மட்டும் பதினெட்டு முடிந்து பத்தொன்பது வயதாகியும் 'பெரியவ'ளாகாமலே தாமுவின் பொறுமையை அளவுக்கு அதிகமாகவே சோதித்து விட்டுக் கடைசியாகப் போன மாதம் தான் அவன் வயிற்றில் பாலை வார்த்தாள்! ஆம். அவள் பெரிய மனுஷியாகிப் போனாள்.

இப்போது விதி லேடி டாக்டரின் வடிவில் இன்னும் சதி செய்து கொண்டிருக்கிறது.

மற்றப் பெண்களைப் போல இல்லையாம். இவ்வளவு காலம் கடந்து ஆகியிருப்பதால் அதற்குள் அவசரப்பட்டு கல்யாணம் செய்து வைத்தால் ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று ஆகிவிடவும் வாய்ப்பு உண்டு. எதற்கும் இந்த ஒரு வருஷம் பார்த்துக் கொண்டு எல்லாம் 'நார்மலாக' இருந்தால் அடுத்த 'தை'யில் முகூர்த்தம் வைத்துக் கொண்டுவிடலாம் —'நெருங்கின சொந்தத்திலே வேறு தருகிறீர்கள். நான் சொல்கிறபடி பார்த்துக்கொண்டு செய்வதே நல்லது. பிறகு உங்கள்

இஷ்டம்' என்று தீர்மானமாகச் சொல்லி விட்டாள்.

ஆத்திரப்பட்ட தாமுவை அருணாதான் தேற்றினாள்.

''இணைற்று நீரை வெள்ளமா கொண்டு போய் விடப் போகிறது?''

அருணாவின் இந்தக் கடைசி அஸ்திரம் தாமுவின் மனத்தில் சற்று ஆழமாகவே ஊடுருவித் தைத்தும் விட்டது!

''மனசுக்காகத்தான் அருணா உன்னைக் காதலிச்சேன். இப்பவும் அதுக்காகத்தான் நேசிக்கிறேன். இனிமேலும் அதுக்காகவே காத்திருப்பேன்'' என்று அவனும் வீம்பாகவே சொல்லிவிட்டுப் பெங்களூர் கிளம்பி விட்டான்.

பெங்களூரில் சித்தப்பா இருந்தார்.

ஜெயநகரில் வீடு.

ஏறக் குறைய அறுபது எழுபது லட்ச ரூபாய்ச் சொத்துக்களும் ஒன்றரைக்கோடிக்கு மேல் வியாபாரப் புழக்கமுமுள்ள சேட்டின் ஏக புத்ரி மிருதுளா தாமுவோடு பெங்களூரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பியபொழுது அவளே கூட இப்படி நினைத்துப் பார்த்திருப்பாளா என்பது சந்தேகம்!

விஸ்வேஸ்வரய்யா டெக்னலஜிகல் மியூசியம் வாசலில் பாதையின் ஒரு முனையில் இருந்து மியூசியத்தின் வாசலுக்குவரும்போது திடீரென்று பாய்ந்துவந்த கர்னடகா ஸ்டேட் டிரான்ஸ்போர்ட் பஸ் ஒன்றிலிருந்தும்—இரண்டு பக்கமும் சூழ்ந்து கொண்ட ஆட்டோக்களில் இருந்தும் அவளைக் கையைப் பிடித்து இழுத்துக் காப்பாற்றிய தாமுவை நன்றியோடு அவள் பார்த்த அந்தக் கணத்தில்தான் அவள் மனத்திலேயே அந்தத் தீர்மானம் உருவாகி யிருக்க வேண்டும்!.

மியூசியத்துக்கு உள்ளே சுற்றிச் சுற்றிவரும் போது அதன் ஒவ்வொரு மாடியாக ஏறும் போது பிறகு கப்பன் பார்க்கிலும் அவள் கண்களின் விளிம்பில் தாமுவின் மீது மெலிதான காதல் மையிட்டிருந்தது.

லேசான உரசல்களில்—

படியில் ஏறும்போது சோர்ந்துவிட்ட பாவனையில் அவன் கைகளைப் பற்றிக் கொண்டு நடந்ததில்—

''இந்தாப்பா, குடுகுப்பை அதான் துணி குடுத்தேனே இன்னும் ஏன் நிக்கிறே?''

''ஒரு சோப்பு இருந்தால் குடு தாயே! துணி யிலே அழுக்கு நாத்தம் சகிக்கலே!''

—அ. இராமதாஸ்



புல்வெளியில் அவன் அருகில் ஒட்டினாற் போல உட்கார்ந்து கொண்டதில்—

ஒவ்வொரு அசைவிலும் அவள் காதல் அவனுக்கு நன்றாகவே தெரிந்தது.

அவனைப் பொருத்தவரை மிருதுளாவின் சொத்தோ சுகமோ அழகோ படிப்போ—வேறு எதுவுமோ பெரிதில்லை! அவன் அருமைக் காதலி அருணாவுக்குப் பிறகுதான் எல்லாமே! ஆனால்... ஆனால்...

மிருதுளாவின் மனத்தை நோகச் செய்தால் அந்தக் கணமே அந்தக் கம்பெனியில் தன் சீட்டுக் கிழிந்துவிடும்! மிருதுளா, சேட்டின் ஒரே செல்ல மகள். அவள் பொருட்டு சேட் எத்தனை பேரை வேண்டுமானாலும் வீட்டுக்கு அனுப்புவான்.

தாமு தர்மசங்கடத்தின் உச்சியில் கையைப் பிசைந்து கொண்டும், தலையை அனாவசியமாகப் போட்டுப் பிய்த்துக் கொண்டும் பைத்தியம் பிடித்தவன் போல் இருந்தான்.

மிருதுளா!—

அருணா!—

யார்?—

இருவரில் யார்?—

அவன் மனத்தில் ஒரு நராக தொங்க—தராசின் இரண்டு தட்டுக்களிலும் மிருதுளாவும் அருணாவுமே ஏறி நின்று கொண்டிருந்தார்கள்.

தட்டு அப்படியும் இப்படியுமாக ஆடியது.

ஒருபக்கம் அருணாவின் மீது சின்ன வயசில் இருந்து வளர்ந்து கொண்டுவந்த காதல்.

மறு பக்கம் மிருதுளாவின் பணம், அவள் காதல். அதை ஒப்புக்கொள்ளாவிட்டால் எப்படியும் போய்விடப் போகும் தன்னுடைய உத்யோகம்....!

கடைசியில் அருணாவின் தட்டே தாழ்ந்து நின்றது.

அன்றைக்கு மைசூர் போவதாக இருந்த திட்டத்தை மாற்றி, கப்பன் பார்க் போக லாம் என்றாள் மிருதுளா.

பார்க்கில் அவர்கள் இருவரும் ஒரு ஓரமாகச் சற்று ஒதுக்குப்புறமாக உட்கார்ந்து கொண்டு இருந்த போது—

அவள் வெட்கத்துடன்—

இயல்பாகவே சிவந்த முகம் மேலும் சிவக்க விரல்களால் புல்லை இழுத்து அதன் அடிப் பகுதியைக் கடித்துக் துப்பியபடி—

கொஞ்ச நேரம் வெட்கப்பட்டுவிட்டு—

தனக்குள்ளாகவே தைரியத்தை வரவழைத்துக்கொண்டு சொன்னாள்:

''தாமு ஐ...ஐ... லவ்... யூ!''—

ஒரு கூடை நெருப்பை யாரோ தன் தலை மீது ஒரே சமயத்தில் சாய்த்தது போல் இருந்தது தாமுவுக்கு.

''என்ன என் பேச்சுக்குப் பதிலையே காணோம்?'' மிருதுளா அவன் தோளைப் பற்றி லேசாக உலுக்கினாள்.

சட்டென்று தூக்கக் கலக்கத்திலிருந்து எழுந்தவனைப் போல் விழித்துக் கொண்டான் தாமு.

''ம்...ம்...'' என்றான்.

மிருதுளாவுக்கு அதுவே கோபமாகிவிட்டது.

## கால்ஷியம் சத்துக்
## குறைவான எலும்புகள் பலவீனமானவை எளிதில் வலுவிழந்துவிடும்

# கால்ஷியம்-ஸாண்டோஸ்
# எலும்புகளுக்கு வலுவூட்டுகின்றது.

எலும்புகள் கண்களுக்குத் தெரிவதில்லை. இருப்பினும் அவை உங்கள் குழந்தைகளின் வளர்ச்சிக்கும் அபிவிருத்திக்கும் மிகவும் ஆதாரமானவை. கால்ஷியம் எலும்புகளுக்கும் பற்களுக்கும் இன்றியமையாத பகுதியாகும். கால்ஷியம் சத்துக் குறைவாக இருந்தால் அது பலவீனமான, எளிதில் நொறுங்கக் கூடிய எலும்புகளுக்குக், காரணமாகிறது அதனால் பற்கள் தளர்ச்சி அடைகின்றன. பற்களில் குழி விழுகிறது.

உறுதியான பற்களுக்கும் ஆரோக்கியமான எலும்புகளுக்கும் உங்கள் குழந்தைகளுக்கு 3 லிருந்து 4 வெனில்லா சுவை யூட்டப் பெற்ற கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகளைக் கொடுங்கள். ஒவ்வொரு வில்லையிலும் கால்ஷியம், வைட்டமின்கள் ஸி.டி. மற்றும் பி 12ம் அடங்கியுள்ளன.

உங்கள் குழந்தை ஒவ்வொரு நாளும் கால்ஷியத்தை இழக்கிறது. இந்த நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டும். இல்லையேல் குழந்தையுடைய வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. சாதாரண உணவிலும் குழந்தைகளுக்குப் போதுமான கால்ஷியம் கிடைப்பதில்லை.

இன்றே உங்கள் குழந்தைக்கு கால்ஷியம் ஸாண்டோஸ் கொடுக்கத் தொடங்குங்கள். காலதாமதம் செய்யாதீர்கள். பின்னால் எவ்வளவு கால்ஷியம் கொடுத்தாலும் அந்த நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது.

நினைவிருக்கட்டும், கால்ஷியம் வில்லைகள் எல்லாம் ஒரே மாதிரியானவை அல்ல.

கால்ஷியம் ஸாண்டோஸ்—என்று வற்புறுத்தி வாங்குங்கள். வேறு எதையும் வாங்காதீர்கள்.

கால்ஷியம் ஸாண்டோஸ்—
உலகிலேயே மிகச் சிறந்த
கால்ஷியம்
ஸ்விட்ஸர்லாந்து
நாட்டில்
ஸாண்டோஸால்
உருவாக்கப்பட்டது



**கால்ஷியம்-ஸாண்டோஸ்®**
**வலுவுள்ள பற்களுக்கும்**
**உறுதியான எலும்புகளுக்கும்**




daCunha/S-25/TMR

''எவ்வளவு சீரியஸான ஒரு விஷயத்தைப் பற்றிச் சொன்னேன் தூங்கிவிட்டீங்களா?... சேச்சே!''—

மிருதுளா கோபத்துடன் 'விசுக்'கென்று எழுந்து 'விடுவிடு'வென்று நடந்தாள்.

தாமு அவள் பின்னாலேயே ஓடினான்.

''இப்படிப் பேசாமல் இருந்தால் என்ன அர்த்தம்?''

''நீ ரொம்பச் சுலபமாக் கேட்டுட்டே மிருதுள்! நான் அவ்வளவு சீக்கிரம் ஓ.கே. சொல்லிவிட முடியுமா என்ன? எனக்கும் யோசிக்கக் கொஞ்சம் நேரம் குடு...!''

''இதிலே என்ன யோசிக்க இருக்கு?''

''எவ்வளவோ இருக்கு!''

''ஆல்ரைட் இன்னிக்கு சாயங்காலம்வரை டயம் தரேன். அதுக்குள்ளே நல்லா யோசி யுங்க. இன்னிக்கு ராத்திரி நாம பிரிஞ்சு போறதுக்குள்ளே நல்ல பதிலைச் சொல்ல ணும்... ஓ.கே?''

''ஓ.கே.''

அவளைப் போலவே கட்டை விரலை மட்டும் உயர்த்தி ''தம்ஸ் அப்'' செய்து காட்டினான் தாமு.

''ஒரு புடவை வாங்கணும் தாமு!''

சட்டென்று புடவைக் கடை வாசலில் நின்று கொண்டு சொன்னாள் மிருதுளா.

தாமு பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தான். சேட் தந்த பணம் இருந்தது.

''ம்... போகலாம்'' என்று கடைக்குள் நுழைந்தான். மிருதுளா அவன் பின்னாலேயே வந்தாள்.

''மேட்சிங்கா ப்ளவுஸ் கிடைக்குமா? அப்போதான் இந்த ஸாரியை எடுத்துப்பேன்.''

''வாங்கம்மா பார்க்கலாம்!''

அந்த சேல்ஸ்மேன் கையில் புடவையைச் சுருட்டிக் கொண்டு ஜாக்கெட் பீஸ்கள் அடுக்கி இருந்த பகுதிக்குப் போனான்.

கடைக்காரன் எடுத்துப் போட்ட நாலைந்து துணிகளைப் பார்த்துச் 'சட்'டென்று உதட்டைப் பிதுக்கினாள்.

சோதனையாக அந்தப் புடவையின் உடம்பு நிறத்துக்குச் சரியான மேட்சிங் ப்ளௌஸ் கிடைக்கவில்லை.

''அப்போ எனக்கு இந்தப் புடவையும் வேண்டாம்!''

'பளிச்'சென்று சொல்லிவிட்டு 'விடுவிடு' நடந்து வெளியேறிவிட்ட மிருதுளாவை ஆச்சரியமாகப் பார்த்தான் தாமு.

மனத்தில் பளிச்சென்று ஒரு வெளிச்சம் மின்னலிட்டது.

''ஒரு புடவைக்கு இவ்வளவு மேட்சிங் பார்க்கிறாயே மிருதுள். அந்தப் புடவையை நீ ஆசைப்பட்டுத்தானே தேர்ந்தெடுத்தாய்? இப்போது அந்த ஜாக்கெட் கிடைக்கவில்லை என்பதற்காகப் புடவையின் மேல் வைத்த ஆசையைக் கூட சேர்த்து உதறிவிட்டாயே?'' மென்மையாக அவளைச் சமாதானப்படுத்துகிற குரலில் கேட்டான்.

நடந்து கொண்டிருந்த மிருதுளா நின்றாள்.

''மேட்சிங் ப்ளவுஸ் இல்லாமல் வெறும் புடவையை வைத்துக் கொண்டு என்ன பண்ணுவதாம்? வீண்தான் அது.''

> ''நடிகை வெட்கப்படுற ஸீன் எடுக்க முடியாததினாலே ஷூட்டிங் கான்ஸல் ஆயிருச்சு!''
>
> ''ஆச்சர்யமாயிருக்கே, வெட்கப்படற மாதிரி ஏன் எடுக்க முடியலே?''
>
> ''நடிகை நகத்தை வெட்டித் தொலைச்சிட்டாங்களாம்! நகத்தைக் கடிச்சாத்தான் வெட்கப்பட முடியும்னு சொல்லிட்டாங்க!''
>
> அ. இராமதாஸ்

''நான் ஒண்ணு சொல்வேன். கோபித்துக் கொள்ளக் கூடாது.''

''என்ன?'' என்கிற மாதிரி இடுப்பில் கையை ஊன்றிக் கொண்டு நின்றாள்.

''ஒரு புடவைக்கு இவ்வளவு தூரம் மேட்சிங் பார்க்கிற நீ உன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்க எவ்வளவு தூரம் யோசித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும்? இட ரென்று என்னை 'லவ்' பண்ணுவதாகச் சொன்னாயே! நாம் இருவரும் எந்த விதத்திலாவது மேட்சிங்கா என்று நினைத்துப் பார்த்தாயா?''

சட்டென்று அவள் முகம் கறுத்தது.

பார்வை தாழ்ந்தது.

இவ்வளவு நேரமும் இருந்த துள்ளலும் துடிப்பும் மாறிப் போயிற்று.

ஆழமாக யோசிக்கிறாள்!

தாமுவுக்குச் சந்தோஷமாக இருந்தது.

அதன் பிறகு அவள் அவனிடம் எதுவும் பேசவில்லை. சற்று விலகியே நடந்தாள்.

பெங்களூர் நகரம் புகை மூட்டம் போன்ற மெலிதான பனியில் மூழ்கி — மெர்க்குரி விளக்குகள் சோகையாய் வெளிச்சம் பரப்பிய முன் இருட்டு நேரத்தில் அவர்கள் வீட்டை அடைந்தார்கள்.

மிருதுளா காலிங் பெல்லை அழுத்திவிட்டு மௌனமாக நின்றிருந்தாள்.

தாமுவை ஊடுருவிப் பார்த்தாள்.

''ஐ'ம் ஸாரி...!'' என்றாள்.

தாமு அவளை அனுதாபத்துடன் நிமிர்ந்து பார்த்தான்.

அவள் முகம் இறுகி யிருந்தது.

லேசாக வெட்கப்படுவதும் தெரிந்தது!

ஆசைக்கு வெட்கம் இல்லை என்று யார் சொன்னது? அதற்கும் வெட்கம் உண்டு என்று தாமுவுக்குத் தோன்றியது.

ஆசைக்கு வெட்கம்உண்டு, வேதனைஉண்டு, சோகம் உண்டு, எல்லாம் உண்டு என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே அவன் திரும்பி நடந்தான்.

அருணாவை நினைத்துக் கொண்டே நடந்த அவனைப் பார்த்து ஆட்டோ டிரைவர் ஒருத்தன் கையை நீட்டிக் கோபமாகத் திட்டிக் கொண்டே ஆட்டோவைச் சட்டென்று வளைத்து நெளித்து சர்க்கஸ் பண்ணுகிறமாதிரி ஓட்டிப் போனான்.

தாமுவின் அப்போதைய மனநிலையில் எதுவுமே அவனைப் பாதிக்கவில்லை!

ஆம்!— ஆசைக்கு ரோஷம்தான் இல்லை போலிருக்கிறது!





# மனவாசம்

கண்ணதாசன்

## 33. தாய்லாந்துக் கிளிகள்

மலேஷியச் சுற்றுப் பயணத்தை மேலும் மேலும் விவரித்துக் கொண்டே போக, அவன் விரும்பவில்லை.

அந்தக் காலங்களில் ஒரு நாடு விட்டு இன்னொரு நாட்டுக்குப் போவது அதிசயமாக இல்லை. காலங்கள் சுருங்கிவிட்டன். தூரங்கள் சுருங்கிவிட்டன. அதிலேயும் மலேஷியா வுக்கோ, சிங்கப்பூருக்கோ இந்தியாவிலிருந்து, குறிப்பாகச் சென்னையிலிருந்து போவதென் றால் மிகச் சுலபம் என்றாகிவிட்டது.

அப்படியும் அவன் மலேஷியாவுக்குப் பல தடவை போயிருக்கிறான். ஆகவே, மலேஷி யாவுக்குப் போன முதல் விஜயத்தை அவன் அதிகமாக வருணிக்க விரும்பவில்லை. அது ஒரு அற்புதமான அனுபவம் என்பதோடு அவன் நிறுத்திக் கொள்ள விரும்புகிறான்.

ஆனால் மலேஷியாவில் இருந்தபோது மலேஷியாவின் எல்லையோர தாய்லாந்தின் கிராமமான ஹாட்ஜய்க்குப் போனது மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகும்.

பினாங்கிலிருந்து அலோஸ்டார் சென்று, அலோ ஸ்டாரில் இருந்து ஹாட்ஜய்க்குச் செல்ல வேண்டும்.

நண்பர் சித்தியவான் கிருஷ்ணன் எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தார். ஒரு வார காலம் ஹாட்ஜயிலே போய்த் தங்க வேண்டும் என்று அவர்கள் திட்டம் போட்டிருந்தார்கள்.

அவர்களுடைய கார்கள் அலோ ஸ்டாரைக் கடந்து ஜித்ரா சென்று ஜித்ராவிலிருந்து மூன் ருந்து மைலில் இருக்கும் தாய்லாந்து எல்லை யைப் பிடித்தபோது ஏறக் குறைய மணி ஐந்தாகி விட்டது.

அங்கு சடங்குகள் மிகவும் சுலபம். 'விசா' கொடுப்பதானாலும், எவ்வளவு பெரிய விவ காரமானாலும் கஸ்டம்ஸிலும் சரி, மற்ற இடங்களிலேயும் சரி, மிக வேகமாக நடந்து கொள்கிறார்கள். இந்தியாவைப் போல மச மசவென்கிற நிலைமை இல்லை. திரும்பத் திரும்பச் சந்தேகப்படும் நிலைமையில்லை; யாரைப் பார்த்தாலும் கூட ஐயக் கண்க ளோடு நோக்கக்கூடிய நிலைமை அங்கு அறவே இல்லை.

அதனாலே தாய்லந்துக்குள் நுழைகிற விசாவை அரை மணி நேரத்தில் பெற்றுக் கொண்டு விட்டார், நண்பர் சித்தியவான் கிருஷ்ணன்.

அங்கிருந்து புறப்பட்டுப் போனால் தாய் லாந்துக்குள்ளே போகப் போக ஏதோ இந் தியாவிலே தஞ்சாவூருக்குள்ளேயோ வேறு எந்தப் பகுதிக்குள்ளோ போவதாகத் தோன் றிற்று. குறிப்பாகத் தமிழ் நாட்டுக்குள் ளேயே போவதாக அவனுக்குத் தோன்றிற்று.

அந்தப் பக்கமெல்லாம் ஒரே நெற் களஞ் சியங்கள். எந்த வயலிலே திரும்பினாலும் நெல் விளைந்து கிடந்தது.

நெல்லை வெளி நாட்டிலே பார்க்கும்போது அது தமிழனைத்தான் ஞாபகப்படுத்தும். தமிழ் நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்கு முக்கிய மாக இழக்காசிய நாடுகளுக்குப் போன ஒரே தானியம் நெல்லாகும்.



✖ தாய்லாந்து பெண்களின் நடனம்.

அந்த நெல்தான் மிகப் பெரிய பொருளாதாரத்தைத் தாய்லாந்துக்குத் தந்திருக்கிறது. நெல் பயிரிடுவதுதான் அவர்களுடைய மிகப் பெரிய தொழிலாகும். அதைக் கற்றுக் கொடுத்தது தமிழர்களாகத்தான் இருக்க முடியும் என்பது அவனுடைய திடமான அபிப்பிராயம்.

இரண்டு பக்கங்களிலும் நெற் களஞ்சியங்களாக அந்த வயல்கள் நின்றுகொண்டிருந்தன. அந்த வயல்களுக்குள்ளே பாய்ந்து பாய்ந்து வெள்ளம் புறப்பட்டுக் கொண்டிருந்தது. ஒரு இடத்தில் கூட கிணறு வெட்டித் தண்ணீர் இறைக்கக் கூடிய காட்சியைக் காணோம். எங்கேயும் வானம் மும்மாரி பெய்து கொண்டிருந்தது.

சுமார் ஒண்ணரை மணி நேரத்தில் ஹாட்ஜாயைப் பிடித்து விட்டோம்.

ஹாட்ஜாயில் ஒரு பெரிய ஹோட்டல். ஏறக்குறைய டில்லியிலே இருக்கும் அசோகா ஹோட்டலில் முக்கால் வாசி இருக்கும்.

ஹாட்ஜாய் என்கிற ஊர் எப்படி இருக்கும்? அது ஒரு திருப்பூரைப் போலவோ கரூப்பூரைப் போலவோ மிகச் சாதாரணமான சிறிய ஊர்.

அந்த ஊரிலே ஏன் அவ்வளவு பெரிய ஹோட்டல்?

எல்லைப்புறத்தில் இருந்து வருகிறவர்களுக்கு வசதி செய்து கொடுத்து, வெளி நாட்டுச் செலாவணி சம்பாதிப்பதற்காகத் தாய்லாந்து அரசாங்கம் செய்திருந்த ஏற்பாடு அது. அங்கே எல்லா வகையான வசதிகளையும் அவர்கள் உண்டாக்கி யிருந்தார்கள்.

வேண்டும் வகையான மாமிச வகைகள், வேண்டும் வகையான மது வகைகள், வேண்டும் வகையான பெண்ணினங்கள் — எதுவானாலும் அங்கே சட்டப் பூர்வமாகப் பெறுவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

ஆகவே, அதை நாடி வெளி நாட்டுப் பயணிகள் வருவார்கள். அவர்களுக்குத் தங்குவதற்கு வசதி வேண்டும் என்று பிரம்மாண்டமான ஹோட்டலையும் கட்டி இருந்தார்கள்.

ஊருக்குள்ளே உலவி வந்தபோது ஊரினுடைய நடுத்தர வாழ்க்கை தெரிந்தது.

தாய்லாந்து வறுமையிலேயும் இல்லை, பணக்காரத் தன்மையிலேயும் இல்லை. நடுத்தர வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தது. ஆனால் நடுத்தர வாழ்க்கையில் ஒரு நாணயம் இருந்தது. அதே நேரத்தில் தமிழர்களிடத்தில் அளவு கடந்த பற்றும் ஆசையும் இருந்தது.

யாரைக் கேட்டாலும் கூடத் தமிழர்கள் என்று சொன்னால் உடனடியாக அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்கின்ற எண்ணம் இருந்தது.

அங்கேயும் பலபேர்கள் ஜானகி, சீதா என்றிருந்தார்கள். தாய்லாந்தை ஆண்டு கொண்டிருக்கும் மன்னர், தான் ராமருடைய பரம்பரை என்று இன்னும் சொல்கிறார்.

தாய்லாந்துக்கு உள்ளே தலைநகருக்குப் பக்கத்திலே இன்னும் 'அயோத்தி' என்று ஒரு பட்டணம் இருக்கிறது. அதுதான் ராமர் வாழ்ந்த இடம் என்று அடித்து அங்கே பேசுகிறார்கள்.

ராமாயணத்தைப் பற்றிமட்டுமல்ல, தமிழ் நாட்டுக்கும் தங்களுக்கும் உள்ள தொடர்பை அவர்கள் பெருமிதமாகக் கருதுகிறார்கள். இந்தியர்களும் சீனர்களும் தங்கள் கலாச்சாரத்தை அதிகமாகப் பரப்பிய இடம் தாய்லாந்து. ஆகவே அதற்கு இந்தோ-சீனா என்ற பெயர் முதலிலேயே இருந்தது என்றும் பின்னாலே அது தாய்லாந்து என்று மாறிற்று என்றும் அவர்கள் கூறுகிறார்கள். நாமும் அது பற்றி வரலாற்றிலே படித்திருக்கின்றோம்.

இந்தோ-சீன ரத்தக் கலப்பு அதிகம் இருந்த காரணத்தாலே முகத் தோற்றங்களும், அந்தப் பெண்களுடைய அங்க அமைப்புக்களும் முழுக்க முழுக்க இந்திய பாணியிலே இருப்பதை அவனாலே காண முடிந்தது.

அந்த நாட்டினுடைய மொழியிலே தமிழ் வார்த்தைகள் இரண்டொன்றுதான் கலந்திருந்தன. பெருமளவுக்கு இல்லை.

ஆனாலும் கூட தமிழ் நாட்டோடு தங்களுக்கு இருந்த தொடர்பை அவர்கள் இன்னும் பெருமையாகக் கருதுகிறார்கள்.

---



"'இப்படி பெயிலாகிப் போயும், கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாமல் திரிகிறானே உங்க பிள்ளையாண்டான் — வருஷம் பூராவும் அவனுக்கு என்னத்தைச் சொல்லிக் கொடுத்தீங்க?"

"'தோல்வி கண்டு அஞ்சாமை வேண்டும்' என்றுதான் சொல்லிக் கொடுத்தேன்!"

—பெ. கலாசாமி

அரசியல்வாதி: "நினைச்சது கிடைக்கும்னு அரசியலில் நுழைந்து மீட்டிங் பேச ஆரம்பிச்சா நினைக்காததெல்லாம் கிடைச்சுத் தொலைக்குது!"

நண்பர்: "என்ன நினைச்சீங்க... என்ன கிடைச்சுது?"

அரசியல்வாதி: "நினைச்சது பட்டம் பதவி பங்களா! கிடைச்சது கற்கள்... செருப்பு... அழுகிய முட்டை!" -உ. ராஜாஜி



ஹட்ஜயிலே தங்கி இருந்த போதுதான், பங்களா தேஷ் விடுதலைப் போரில் கிழக்குப் பாகிஸ்தான் சரணடைந்த செய்தி வந்தது.

சரணடைந்த செய்தியைக் கேட்டதும் அங்கே இருந்த தாய்லாந்துக்காரர்கள் ஆடிக் குதித்துக் கொண்டு ஓடிவந்து, "ஈஸ்ட் பாகிஸ்தான் சரண்டர், சரண்டர், சரண்டர்" என்று சத்தம் போட்டார்கள்.

அதிலே இந்தியர்களை விட அவர்களுக்குத் தான் உற்சாகம் அதிகமாக இருந்தது.

தாய்லாந்தில் அழகு அழகான பெண்களை எல்லாம் அவன் சந்தித்தான். அதைப் பற்றி எழுதவோ பேசவோ அவன் கூச்சப்படவில்லை.

தான் தாய்லாந்தில் சந்தித்த பெண்களைப் பற்றி 'தாய்லாந்துக் கிளிகள்' என்றே அவன் ஒரு கவிதை எழுதினான்.

ஆம். நம்முடைய கேரளத்துப் பெண்களைப் போல நீண்ட கருங்கூந்தலையுடைய அழகான பெண்களாக அவர்கள் காட்சியளித்தார்கள். அவர்கள் வெள்ளைக்காரர்களைப் போல சுண்ணாம்பு நிறத்தில் இல்லை. இந்தியர்களைப் போல, இந்தியர்களிலே அழகான பெண்களைப் போல அவர்கள் காட்சியளித்தார்கள்.

அவ்வளவு நீண்ட கூந்தல் யாருக்கும் வாய்க்காது. அந்த நாட்டுக்கு மட்டும்தான் வாய்த்திருக்கிறது. 'கூந்தலை வெட்டி விடுகிற குணம் அந்த நாட்டுப் பெண்களுக்குக் கிடையாது.

கூந்தல் எவ்வளவுக்கெவ்வளவு நீளமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு பெண்மை லாகவமாக இருக்கும் என்பார்கள். அந்த லாகவத்தை அங்கே காண முடிந்தது.

இதோ, அந்த தாய்லாந்துக் கிளிகளைப் பற்றி அவன் எழுதிய பாடல்:

கள்ளரும்பிய வாயிதழ் மழைக்
கார் அரும்பிய பூங்குழல்
உள்ளரும்பிய பல்லணி அதன்
ஊடரும்பிய தேன்மொழி
வெள்ளரும்புகள் பால்நுதல் சிறு
விழியரும்புகள் நாடகம்
துள்ளரம்பையின் சாயலோ இளந்
தோளரும்பிய 'தாய்'க்கிளி!

பொன்னடங்கிய பெட்டகம் கனி
போல் அடங்கிய மார்பகம்
மின்னடங்கிய மெல்லிடை அதன்
மேலடங்கிய ஆலயம்
தன்னடங்கிய முனிவனும் மனம்
தானடங்குவ தில்லைகாண்
இன்னடங்கிய பாத்திரம் அவள்
ஈடடங்கிய 'தாய்'க்கிளி!

கையிரண்டினை ஆண்டவன் உடல்
கட்டிவிட்டதன் காரணம்
மெய்யிரண்டினை ஒன்றுபோல் சுகம்
மீறவைப்பது தானரோ!
நெய்திரண்டன மேனியில் சில
நேரம்நின்றன என்விழி
கொய்துகொண்டது கைவழி கலை
கூடிநின்றது 'தாய்'க்கிளி!

நகரமென்பது * ஹட்ஜயே அது
நாடகங்களின் தாயகம்
சிகரமென்பது பெண்மையே அவர்
சேவை இந்திய பாணியே
பகரும் பேர்களில் சீதையும் அவர்
பாடும்ராமனின் காதையும்
நகரவில்லை என்நெஞ்சினை கவி
நடத்துகின்றனள் 'தாய்'க்கிளி!

(வளரும்)

* ஹட்ஜய் — தாய்லாந்து நகரம்

## மனம் கவரும் மலர்ச்சி

# 11.5% டிவிடெண்ட் — என்றுமில்லாத வளர்ச்சி

1981, ஜூன் 30ம் தேதியுடன் முடிந்த ஆண்டிற்கு யூனிட் ட்ரஸ்ட் 11.5% டிவிடெண்ட் வழங்குகிறதென் பதை மகிழ்வுடன் அறிவிக்கிறோம். இதுவரை அளித்து வந்த டிவிடெண்டு களில் இதுவே அதிகமானதாகும். ஆண்டுக்கு ஆண்டு டிவிடெண்டு அதிகரித்துக் கொண்டே வருகிறது. இது யூனிட்டுகள் ஒரு உயர்தரமான முதலீடு என்பதையே காட்டுகிறது. ஆண்டுதோறும் உங்கள் முதலீட் டுக்கு நல்ல நிரந்தரமான வருமானம் கிடைக்கிறது.

இதுவே சரியான தருணம். யூனிட் டுகள் ஆண்டின் மிகக் குறைந்த விலையான ரூ. 11.50க்கு கிடைக்கிறது. இந்த விசேஷ விலை ஜூலை 31 வரையிலுமே.

**யூனிட்டுகள் எதிர்பார்ப்புக்கும் மேலான நன்மைகள் பல கொண்டது**

உங்கள் முதலீடு பாதுகாப்பாக இருக்கும். உங்கள் முதலீட்டுக்கு நிரந்தரமான நல்ல வருமானம் கிடைக்கும். எப்பொழுது வேண்டு மானாலும் யூனிட்டுகளை எங்களிடம் பணமாக்கிக் கொள்ளலாம். அதோடு துக்கும் மேலாக யூனிட்டுகள் பிரத்யேக வரிச் சலுகைகளையும் அளிக்கிறது.

**வளரும் யூனிட் குடும்பத்தில் இப்பொழுதே சேர்ந்திடுங்கள்**

10 லட்சத்துக்கும் மேலான மக்கள் ரூ. 520 கோடிக்கும் அதிகமான தொகையை யூனிட்டில் முதலீடு செய்துள்ளார்கள். யூனிட்டுகளை எங்களிடம் நேரடியாகவோ, முக்கிய வங்கிகள், தலைமை தபால் நிலையங்கள் அல்லது எங்கள் முக்கிய பிரதிநிதிகள் மற்றும் ஏஜெண்டுகள் மூலமாகவோ பெற்றுக் கொள்ளலாம்.

குறிப்பு: யூனிட்தாரர்களுக்கு டிவிடெண்ட் வாரண்டுகள் ஜூலை 10 தேதியளவில் தபாலில் அனுப்பி வைக்கப்படும்.





**யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா**

தலைமை செயலகம்: பாம்பே-400 020
(பொதுவுடமை நிதி நிறுவனம்)
ரெஜினல் மானேஜர்,
46, செகண்ட் லைன் பீச்
சென்னை-600 001. போன்: 27433

UTI-20-81-Tam

எங்கள் முக்கிய பிரதிநிதிகள்: • திரு. ஏ. தனபால், 10-J, [illegible] ரோட், கோயமுத்தூர்-641 018, போன்: 34776 (கோயமுத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக) • திரு. எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்திற்காக) • திரு. கு. முத்துசாமி, 52-A, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007 போன்: 1224 (தஞ்சாவூர் மாவட்டத்திற்காக)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்**

“சீனு! 'பிரேக்' கெல்லாம் நன்னுப்பிடிக்கிறதான்னு 'செக்' பண்ணிண்டு அப்புறமா சைக்கிளை ரோட்டிலே இறக்கு!''

சைக்கிளை நான் தொடும்போதே அம்மா உள்ளேயிருந்து குரல் கொடுக்கிறாள்.

''சித்திரை மாச வெய்யில் வீணாப் போறதேன்னு வெளியிலேயே சுத்தாதே! என்னைய் தேய்ச்சு வேறே குளிச்சிருக்கே, சீக்கிரம் வீட்டுக்கு வந்துடு.''

இன்னும் ஒரு விநாடி தாமதித்தாலும் அம்மா ஒரு மணி நேரத்துக்குப் புராணத்தை நீட்டிவிடுவாள் என்ற அச்சத்தோடு சைக்கிளைத் தள்ளிக் கொண்டு அந்த ஒடுக்கமான சந்தை விரைவாய்க் கடக்கிறேன். பெரிய சாலையோடு வந்து இணைந்து, வண்டியில் ஏறி மிதிக்கும்போது... மூச்சு முட்டல்களிலேயிருந்து தற்காலிக விடுதலை பெற்ற உணர்வு நெஞ்சை நிறைக்கிறது.

நெடுஞ்சாலையில் வாகனங்கள் ராட்சத வேகத்தில் சீறிக்கொண்டு கணத்துக்குக் கணம் மின்னலிட்டு மறைகின்றன.

''சீனு! ஓவர் ஸ்பீடா ஓட்டாதே!''

''சீனு! ரெண்டு பக்கமும் நன்னாப் பார்த்துட்டு ரோடை 'க்ராஸ்' பண்ணு!''

அம்மா... செவிப் பறையில் வந்து மோதுகிறாள். ஒரு கையால் 'ஹாண்டில் பாரை'ப் பிடித்தபடி மற்றொரு கையால் ஒரு காதை அழுத்தப் பொத்திக் கொள்கிறேன்.

ஜுர வேகத்தில் வெறி பிடித்தாற்போல் விழுந்தடித்துக் கொண்டு பறக்கும் இந்த வாகன ஓட்டிகளின் வீடுகளில், அம்மாவைப் போல் எச்சரிக்கை மணி அடிக்க ஆட்கள் இருப்பதில்லையோ?

அம்மா...! பயமே வாழ்க்கையாய், வாழ்க்கையே பயமாய் ஆகிப்போன அம்மா! உருவமற்ற பிரமைகளில், மருட்டும் கற்பனைகளில், முகமற்ற பயங்களில்... தன் கால வண்டியை ஓட்டிக் கொண்டிருக்கும் அம்மா!

இவள் எப்போது இப்படி மாறிப்போனாள்?

இளமைக் கால அம்மா... இப்படி ஒரு பய முகத்தைக் காட்டிக் கொண்டிருந்ததாய் எனக்குச் சுத்தமாய் நினைவில்லை. தன் கல்லூரி நாட்களில் மலையேற்றக் குழுவினருடன் முகமெல்லாம் சிரிப்பாய் போட்டோ ஆல்பத்தில் பார்த்த அம்மாவை, கோடை விடுமுறை ஒன்றில் எல்லோருமாய் ஊட்டி போனபோது அப்பாவையும் எங்களையும் கரையில் நிற்க வைத்துவிட்டு, தானே தனியாய்ப் படகை வலித்துக் கொண்டு அக்கரை வரை சென்று வந்த அம்மாவை... எனக்கு இன்னும் நன்றாய் ஞாபகம் இருக்கிறது.

பயம்.... அம்மாவின் பிறவிக் குணம் இல்லை. ஆனால் அது ஒரு தொத்து நோயாய், அவளைப் பற்றிக்கொள்ளத் தொடங்கியது... எப்போதிலிருந்து?

• • •

ஆசிரியர் உதிர்த்த 'ஜோக்' சிரிப்பலைகளால் 'டென்த் ஸ்டாண்டர்ட்-ஏ' அதிர்ந்து கொண்டிருக்கிறது.

# முகமற்ற பயங்கள்

எம்.ஏ. சுசீலா



"ஆர் சீனிவாசனை எச். எம். கூப்பிடுறாரு சார்!"

"சீனிவாசன்!" — ஆசிரியர் என்னைப் பார்க்கிறார். எழுந்து எச். எம். அறைக்கு வருகிறேன். அங்கே காத்திருந்த மாமா, ஒரு வார்த்தைகூடப் பேசாமல் என்னை அழைத்துக்கொண்டு வீட்டுக்கு வருகிறார்.

நண்பர் ஒருவருடன் நேற்று பெங்களூருக்குக் காரில் சென்றிருந்த அப்பா, சாலை விபத்தில் சதைக் கூளமாகி அங்கே... நடுக் கூடத்தில் கிடத்தப்பட்டிருக்கிறார். அம்மா மூலையில் சரிந்து கிடக்க, தங்கை ஜானு ஓடி வந்து என் கைகளைப் பிடித்துக்கொண்டு தேம்புகிறாள்.

• • •

அப்பாவின் அகால மறைவால் ஏற்பட்ட சூனியம், பாதுகாப்பற்ற நிலை அம்மாவின் துணிச்சலைக் குறையாடி அவளைக் கோழையாக்கி விட்டிருப்பதை என்னால் நன்றாகவே புரிந்துகொள்ள முடிகிறது. குடும்ப பாரத்தைத் தனியே சுமப்பதால் விளைந்த பொறுப்பான 'பயங்கள்.... எங்கள் இருவரின் நிகழ்காலம் குறித்த கவலையோடு கூடிய பயங்கள் எதிர்கால இருட்டில் எப்படி நடக்கப் போகிறோம் என்ற தயக்கமான பயங்கள்—நெஞ்சில் புரையோடிப்போன நிரந்தரமான காயத்தால் விளைந்த இந்த ஆழமான பயங்களோடு சில அர்த்தமற்ற பயங்களும் அம்மாவை அலைக்கழிக்கும்போதுதான் அவற்றைப் போக்க வழி தெரியாத கையாலாகாத்தனத்தோடு நான் 'ஊமையாய் விழிக்கிறேன்.

அம்மாவின் பயத்துக்குத்தான் எத்தனை முகங்கள்? எத்தனை வண்ணங்கள்?

சிலவேளைகளில் நான் நினைப்பதுண்டு... 'அம்மாவின் பய ரேகை எட்ட முடியாத இடம்.... இறந்த காலம் ஒன்றுதான் — அது முடிந்து போனதாக இருப்பதால்!'

• • •

வீட்டுக்குள் நுழைகிறேன். அம்மாவுக்கும், ஜானுவுக்குமிடையே உரத்த குரலில் ஏதோ விவாதம் நடந்து கொண்டிருக்கிறது.

"உனக்கென்னடி! நீ பாட்டுக்கு 'ஸ்கூலோட எக்ஸ்கர்ஷன் போறேன். ப்ரண்ட்ஸோட டூர் போறேன்'னு சுலபமாய்ச் சொல்



அருள்வாக்கு

## படிப்படியாக பக்குவமாவோம்!

நாம் பிறந்ததற்கு என்ன பிரயோஜனம்? எதற்காகப் பிறந்தோம்? என்று அடிக்கடி நினைக்க வேண்டும். அந்தப் பிரயோஜனத்தை அடைவோமா என்று நினைக்க வேண்டும். 'நமக்கு ஏன் பாபம் வருகிறது, கோபம் வருகிறது, காமம் வருகிறது? இவையெல்லாம் ஏன் வரவேண்டும்? எப்போதும் ஆனந்தமாக சந்தோஷமாக இருக்கக் கூடாதா?' என்று தோன்றுகிறது. இதற்குப் பதில் ஒன்றும் நமக்குப் புரியவில்லை.

எல்லாம் நல்லதற்குத்தான். ஒரு மரத்திலே புஷ்பத்திலிருந்துதான் காயும் பழமும் உண்டாகின்றன. புஷ்பமாக இருக்கும்போது மூக்குக்கும், பழமாக இருக்கும்போது நாவுக்கும் உபயோகப்படுகின்றன. பழம் நல்ல மதுரமாக இருக்கிறது. இந்த மதுரம் வருவதற்கு முன்பு எப்படி இருக்கிறது? பூவில் கசப்பாகவும், பிஞ்சில் துவர்ப்பாகவும் காயில் புளிப்பாகவும், பிறகு மதுரமாகவும் இருக்கிறது. மதுரம் என்பதுதான் சாந்தம். சாந்தம் வந்தால் எல்லாப் பற்றும் போய்விடுகிறது. உடனே கீழே விழுந்து விடுகிறது. அதுபோல் இதயத்தில் எல்லா இடத்திலும் மதுரம் வந்து விட்டால் தானாகவே எல்லாப் பற்றும் போய்விடும். புளிப்பு இருக்கும்வரை பற்றும் இருக்கும். அப்போது காயைப் பறித்தால் காம்பில் ஜலம் வரும். காயிலும் ஜலம் வரும். அதாவது மரமும் காயை விட்டுவிட விரும்பவில்லை. காயும் மரத்திலிருந்து விடுபட விரும்பவில்லை. ஆனால் நிறைந்த மதுரமாக ஆகிவிட்டால் தானாகவே பற்றும் போய்விடும். பழம் தானே இற்று விழுந்துவிடும். மரமும் பழத்தை விடுகிறது. பழமும் மரத்தை விடுகிறது. இரண்டும் ஜலம் விடாமல் அதாவது அழாமல் ஆனந்தமாக இருக்கும். படிப்படியாக வளர்ந்து மனம் முழுவதும் மதுரமான ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக சம்சார விருக்ஷத்திலிருந்து விடுபட்டு இருப்பான். பழமாக ஆவதற்கு முன் ஆரம்ப தசையில் எப்படிப் புளிப்பும் துவர்ப்பும் வேண்டியிருக்கின்றனவோ அதுபோலக் காமம், வேகம், துடிப்பு எல்லாமும் வேண்டியவை தாம்போலிருக்கிறது. இவற்றுக்கு நாம் ஆரம்ப தசையில் ஆட்படும்போதே இவற்றிலிருந்து பூரணமாக விடுபட முடியாது. ஆனாலும் இவையெல்லாம் ஏன் வருகின்றன என்று அடிக்கடி நினைத்தாவது பார்க்க வேண்டும். 'இதனால் ஏதாவது பிரயோஜனம் உண்டா? அவசியமாக வருகிறதா? அநாவசியமாக வருகிறதா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். அப்படி நினைக்கவில்லையென்றால் அவை நம்மை ஏமாற்றிவிடும். ஏமாந்து விடுவோம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்காராச்சாரிய சுவாமிகள்

விடுவே! தினம் தினம் நீங்க ரெண்டு பேரும் வீட்டுக்கு வந்து சேர்ற வரைக்கும் என் வயிறு பதை பதைச்சிண்டிருக்கிறது எனக்குன்னு தெரியும்?''

என் முகத்தைப் பார்த்ததும் ஜானு, என் சிபாரிசைக் கோருகிறாள்.

''நீயே சொல்லுண்ணு! மனசுக்குப் பிடிச்ச மாதிரி டிரஸ் பண்ணிக்கத்தான் இந்த வீட்டிலே உரிமை இல்லே! நான் என்ன பெல்பாட்டம் மாக்ஸியுமா கேட்கிறேன்? ஆஃப்டர் ஆல் ஒரு சல்வார் கம்மீஸ்! அதுக்குத்தான் அம்மா 144 போடறான்னு. இப்ப எங்க ஸ்கூலிலே அத்தனை பேரும் 'டூர்' போகும் போது எனக்கு மட்டும் பர்மிஷன் தர மாட்டேங்கிறாளே?''

'என். ஸி. ஸி. கேம்ப்ஸ், ரைஃபில் ஷூட்டிங்ஸ் இதிலெல்லாம் கலந்துண்டு பதக்கங்களும், பரிசுகளுமா வாங்கிக் குவிச்சிருக்கிற நீயாம்மா இன்னிக்கு இப்படிக் கோழையாயிட்டே?'

''அம்மா! என்னைத்தான் பி.எஸ்.ஸி. படிக்கிற இந்த நிலையிலேயும் கூட நீ எங்கேயுமே வெளியூர் போக அனுமதிச்சதில்லே!... சரி என் கேஸ் வேறே! நாங்க பையங்க. அங்கே, இங்கே முரட்டுத்தனமாச் சுத்துவோம்னு நீ பயப்படறது நியாயம். ஆனா... ஸ்கூலிலே, இவ்வளவு பெண்களைக் கூட்டிண்டு போறச்சே லேடி டீச்சர்ஸ் கவனமாய்ப் பார்த்துக்க மாட்டாளா?''

''சீனு! இந்த விஷயத்தில் நீ தலையிடாதே. இதோ பாருடி ஜானு! உனக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி ஒருத்தன் கையிலே ஒப்படைச்சிடறேன். அப்புறம் நீ காஷ்மீர்லேயிருந்து கன்னியாகுமரி வரைக்கும் எங்கே வேணும்னாலும் அவன் கூடப் போயிட்டு வா!''

ஜானு முணுமுணுத்தபடியே உள்ளே போகிறாள்.

● ● ●

**வா**சல் வராந்தாவில் விளக்கு எரிகிறது. ஈஸிச் சேரில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த அம்மா, என் தலை தெரிந்ததும் எழுந்து வந்து கதவைத் திறக்கிறாள். வழக்கமான படபடப்பில்லை. பதற்றமான வார்த்தைகள் இல்லை. கனத்த மௌனம், அவளைச் சுற்றித் திரை போட்டிருக்கிறது. அவள் சொல்லவிட்ட, அந்த மௌனம் என்னை வெகுவாய்ச் சுடுகிறது.

சட்டையைக் கழற்றிக் கோட்ஸ்டாண்டில் மாட்டிவிட்டுக் கொல்லைப்புறம் போகிறேன். திரும்பி வரும்போது அம்மா என் சட்டைப் பையில் ஏதோ குடைந்து கொண்டிருக்கிறாள். சட்டைப் பைகளை அலசி ஆராய்ந்த பின், மெள்ள முகர்ந்து பார்க்கிறாள். எனக்கு அர்த்தம் புரிகிறது. 'மன் ஏஜ்' பழக்கங்களுக்குத் தன் மகனும் அடிமையாகி இருப்பானோ என்ற சந்தேகத்தோடு கூடிய பயம் அது!




● முஸ்லீமாகிய நானே, கல்கியின் மூலம் தான் ஆயிரம் விளக்கு மசூதி பற்றி, முழு விவரங்களும் தெரிந்து கொண்டேன். மிக்க நன்றி. ஆனால் கட்டுரையில் ஒரு தவறு. தொழுகை விளிப்பு அராபிய மொழியில்தான் சொல்லப் படுகிறது. உருது மொழியில் அல்ல.

விருத்தாசலம் — எம். ஏ. காதர்

○ மேற்படி கட்டுரையில் வேறு சில தவறுகளையும் முஸ்லிம் வாசகர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். அவர்களுக்கு நன்றி. - ஆசிரியர்

○ 'தர்கா' என்பது சாதுக்களின் அடக்கஸ்தலத்துக்குப் பெயர். அங்கு தொழுகை நடக்காது. மசூதி அல்லது பள்ளி வாசல் என்பது தொழுகை நடக்கு மிடத்தின் பெயர்.

○ மசூதிகளில் திருமணம் போன்றவற்றை நடத்தி வைப்பவர் 'காஜி'. தொழுகையை நடத்தி வைப்பவர் 'பேஷ் இமாம்''. (ஆயிரம் விளக்குமசூதியில் இரு பொறுப்புகளையும் வகிப்பவர் ஒருவரே. அதனால் தான் குழப்பம்).

○ காலை வணக்கம் உருது மொழியில் நமஸ்-பேஜ என்றும் அராபிய மொழியில் நமஸ் ஃபஜர் என்றும் அழைக்கப்படும்.

**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை. மூன்று பேரும் ஒன்றாய் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். அம்மாவின் கவனம், வேறெங்கோ லயித்திருக்கிறது. அவள் தனக்குள் மூழ்கி அமிழ்ந்து கொண்டிருக்கிறாள்.

''ஜானு! அம்மாவுக்கு என்னடி ஆச்சு இன்னிக்கு?''

''அதை ஏன் கேட்கிறே அண்ணு? நம்ம 'நியூஸ் பாக்ஸ்' லட்சுமி மாமி, காலம்பற வந்து ஒரு கதை சொல்லிவிட்டுப் போனா! அதிலேயிருந்துதான் அம்மா இப்படி 'அப்செட்' ஆயிட்டா!''

நான் கேள்விக் குறியுடன் ஜானுவைப் பார்க்க, அவள் விவரிக்கிறாள்.

''அந்த மாமியோட தங்கை ஹஸ்பெண்ட் பத்து வருஷத்துக்கு முன்னாடி ஹார்ட் அட்டாக்லே போயிட்டாராம். ஆத்திலே ரெண்டு பொண்கள்... ஒரு பையன். பையனைத்தான் மலையாய் நம்பி... வயத்தை, வாயைக் கட்டி எம். பி. பி. எஸ். வரைக்கும் படிக்க வச்சிருக்கா! படிப்பு முடியப்போற சமயத்திலே, அவன் கூடப் படிச்ச 'நார்த் இண்டியன்' ஒருத்தியை யாருக்கும் தெரியாமக் கல்யாணம் பண்ணிண்டிருக்கான். இப்ப வடக்கேயே போய்க் குடியேறிட்டான். குடும்பத்தை அவன் திரும்பிக் கூடப் பார்க்கிறதில்லேங்கிற ஏக்கத்திலே அந்த மாமிக்குச் சித்த பிரமையே பிடிச்சுடுத்தாம்.''

''அது சரி. அதுக்கும், அம்மாவோட சோகத்துக்கும் என்ன சம்பந்தம்?''

கை கழுவிவிட்டு வருகிறேன். அம்மா, 'ஹிஸ்டீரியா' வந்தவளைப் போல வேகமாய் எனக்கு முன்னால் வந்து ஒரு ஆவேசத்தோடு என் கைகளைப் பிடித்துக் கொள்கிறாள்.

''சீனு!... நீயும் அப்படிச் செஞ்சிடுவியா? எனக்கே வரவர உடம்பு தள்ளலே! ஜானுவைத் தனியாய் விட்டுடுவியா?''

அவள் பிடியிலிருந்து என் கைகளை அவசரமாய் விடுவிக்கிறேன். காலங் காலமாய் உள்ளே நீறு பூத்துக் கொண்டிருந்த எரிமலை கண் திறந்து கொள்கிறது.

''அம்மா! வில் யூ ஸ்டாப் திஸ் நான்சென்ஸ். கண் முன்னாலே இருக்கிற நிஜங்களைப் பார்த்துச் சந்தோஷப்படறதை விட்டுவிட்டுத் தூரத்திலே இருக்கிற நிழல்களைத் துரத்திண்டு இன்னும் எத்தனை நாளைக்குத்தான் ஓடப் போறே? போலியான பிரமைகளும், பொய்யான மிரட்சிகளும் உன்னைச் சுத்திப் போட்டிருக்கிற வேலியை முதலிலே உடைச்சிண்டு வெளியே வா! வேணும்னு ஜானுவைக் கைவிட மாட்டேன்னு அரசியல்வாதிகள் செய்யற மாதிரி என் ரத்தத்தைக் கீறிக் கையெழுத்துப் போட்டு வாக்குமூலம் தரட்டுமா?...: சரி! நாளைக்கே இன்னொரு வீட்டிலே ஒரு பொண்ணு ஓடிப்போவா... ஜானுகிட்டேயும் அப்படி ஓடமாட்டேன்னு வாக்குறுதி வாங்கிக்கோ! எந்த செயல்கள் உன்கிட்டே ஏற்படுத்தாத நம்பிக்கையையா வார்த்தைகள் உண்டாக்கிடப் போறது?''

பிற்பகல் முழுவதும், வீட்டில் புயலடித்து ஓய்ந்த அமைதி நிலவுகிறது. மாலையில் அதை நானே கலைக்கிறேன்.

''நான் மூர்த்தியோட சினிமாவுக்குப் போறேன். வர லேட்டாகும்.''

''நீயுமா போறே! ஜானு வேறே அவ 'பிரண்ட்' சித்ராவோட 'பர்த் டே பார்ட்டி'க்குப் போறேன்னு சொல்லிண்டு இருக்காளே!''

''அவளும் போயிட்டு வரட்டுமே'' என்று சொல்லியபடி கிளம்புகிறேன்.

● ● ●

'பஸ்ஸரை' அழுத்தியவுடன் அம்மா விரைந்து வந்து கதவைத் திறக்கிறாள். நானும், ஜானுவும் சேர்ந்து வந்திருக்கும் மகிழ்ச்சியுடன், இரவு எட்டுக்குள் நாங்கள் வீடு வந்துவிட்ட திருப்தியும் அவள் முகத்தில் பூரணமாய் நிலவுகிறது.

''சாப்பிட வாங்கோ ரெண்டு பேரும்.''

''எனக்கு வாண்டாம்மா! 'பார்ட்டி'யிலே வயிறு 'ஃபுல்'.''

''சரி. நீ வாடா சீனு.''

தட்டலம்பிப் போட்டு அம்மா பரிமாறுகிறாள். குழம்பு ஊற்றும்போதுதான் திடீரென்று நினைவு வந்தவளாய்க் கேட்கிறாள்.

''ஆமாம்! நீ சினிமாவுக்குப் போறேன்னியே? அதுக்குள்ளே படம் விட்டாச்சா? நீ எப்படி ஜானுவைப் பார்த்தே? ரெண்டு பேரும் எப்படிச் சேர்ந்தேள்?''

''நான் சினிமாவுக்குத்தாம்மா போனேன். டிக்கட் வாங்கி உள்ளே கூடப் போயாச்சு. அப்புறம்தான் ஜானு சித்ரா வீட்டுக்குப் போறுங்கறது 'ஸ்ட்ரைக்' ஆச்சு. அவா வீடு ரொம்பத் தள்ளின்னு இருக்கு! பஸ் ஸ்டாப்பும் லோன்லியா இருக்கும்... சரி... டிக்கட் போனால் போறது. இன்னொரு நாள் படம் பார்த்துக்கலாம்னு மூர்த்தி கிட்டே சொல்லிட்டு அப்படியே கிளம்பி நேரே சித்ரா வீட்டுக்குப் போயிட்டேன். ஜானு அப்பத்தான் புறப்பட்டுண்டிருந்தா! இன்னிக்குனு பார்த்து அங்கே பவர் கட் வேறே!''

பேசிக்கொண்டே சாப்பிட்டு முடிக்கிறேன்.

அம்மா அசைவின்றி உட்கார்ந்திருக்கிறாள். அவள் முகத்தில் அப்பாவின் மறைவுக்குப் பின் அன்றுவரை நான் கண்டிராத ஆயிரம் 'வாட்' விளக்கேற்றினாற் போன்ற பிரகாசம். என் கன்னங்களைத் தன் கைகளால் ஆசை தீர வருடித் திருஷ்டி கழிக்கிறாள்.

''சீனு... இனிமேல் நான் எதுக்குமே பயப்பட மாட்டேண்டா! இந்த நிமிஷத்திலேயிருந்து அதுக்கெல்லாம் விடுதலை கொடுத்து அனுப்பிச்சிட்டேன்.''

பேச வார்த்தைகளற்ற மகிழ்ச்சித் திகைப்பில், அவள் கரங்களை, ஆதுரத்துடன் பற்றிக்கொள்கிறேன்.

''ஏண்டி அசடு! நீயே முன் நின்று உன்கணவருக்கு இரண்டாம் தாரத்துக்குப் பெண் தேடுகிறாயாமே!''

''காரணமாகத்தான்! என் மாமியாரிடம் நான் ஒருத்தியே சண்டை போட்டுச் சமாளிக்க முடியலே. என் கட்சிக்கு ஆள் சேர்க்கிறேன்!''



● மாருதியின் அட்டைச் சித்திரம் கண்டு அசந்து போனேன். அட்டையை விட்டு அடுத்த பக்கம் போக வெகுநேரம் பிடித்தது.
கோவை — ஷீபா

● வாஸந்தியின் அந்தி நேரத்து உதயங்கள் கதை படித்தேன். அடுத்த இதழ் நாளையே வராதா என்று உள்ளது.
சென்னை-44 — டி. ஆர். சந்திரசேகரன்

● தலையங்கம் அபாரம். விசாரணைக் கமிஷனைச் சந்திக்கவே பயந்து ஓடியவர்கள், சட்டத்தின் சந்து பொந்துகளில் புகுந்து குளிர் காய்ந்தவர்கள், இன்று வேதாந்தம் பேசுகிறார்கள். கசாப்புக் கடைக்காரன் காருண்யம் பேசினாலும்– அதைப் போல. என்ன செய்வது – தமிழகத்தின் தலையெழுத்து. மாநில உரிமை பேசியவர்கள் – இந்தி மொழி எதிர்த்தவர்கள் மண்டியிட்டு இன்று டெல்லிக் கதவைத் தட்டுகிறார்கள். இந்த லட்சணத்தில் தமிழனே! தமிழனே! என்ற அலறல் வேறு!
வேலூர் — வே. இராஜேந்திரன்

● சர்க்காரியா கமிஷனுடன் ஒத்துழைக்கவே மாட்டேன் என்று திரு கருணாநிதி கூறவில்லை. ஒத்துழைக்கும் எண்ணத்துடன்தான் திரு சாந்திபூஷண் போன்றவர்கள் விசாரணையில் ஆஜராகத் தயாராக இருந்தனர். குற்றம் சுமத்தியவர்களைக் குறுக்கு விசாரணை செய்ய வாய்ப்புக் கிடைக்காது என்ற நிலையில் தான் திரு கருணாநிதியும் அவர் தரப்பினரும் விலகினர்.
பங்களூர் — வசந்தா சுந்தரேசன்

● இவ்வார கல்கியில் வெளியாகியிருந்த கதைகள் அனைத்தும் சிறப்புச் சிறுகதைகளோ என வியக்கும்படி பிரமாதமாக இருந்தன. சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வரும் கல்கிக்கு விசேஷப் பாராட்டுக்கள்.
திம்மராஜபுரம் — என். ராமகிருஷ்ணன்

● 'ஜிம்பக ஜிம்பா', 'ரூமுலியா', 'ரூமு விஷன்', 'விடிகுடிப்பிடியோ எனர்ஜி' – கேசியின் அம்போலோ 555 ஒரே அமர்க்களமேதான்!
திருவல்லிக்கேணி — 'எம்பிரான்'

● நான்கு சிறுகதைகளின் பிரதான பாவங்களை அபிநயித்துக் காட்டி இருக்கிற குமாரி சௌம்யா நாராயணின் முகபாவங்கள் வெகு சிறப்பு.
மதுரை — என். கண்ணன்

● கல்கியில் வந்ததோ விளம்பர விட். பெற்றதோ பிரமாத ஹிட்.
கடலூர்-2 — தங்க. குஞ்சிதபாதம்

● எனது துணுக்கில் கோவையிலுள்ள கோனி அம்மன் கோவில் என அச்சாகியுள்ளது. கோவையில் உள்ளது அருள்மிகு கோனி அம்மன் கோவில்தான்.
கோவை — எல். ஜி. சங்கர்




● நியூஸ் ஜூஸ் பகுதியில் "நமக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, பாரத நாட்டின் சரித்திரத்தில் சஞ்சய் ஓர் அத்தியாயம்தான்" என்று குறிப்பிடப்பட்டிருப்பதை தார்மீக எண்ணம் கொண்ட எவரும் ஏற்றுக்கொள்ளவே மாட்டார்கள். சஞ்சயின் அத்தியாயம் இந்தியாவின் சரித்திரத்தைக் களங்கப்படுத்துவதாகத்தான் இருக்கும்!
வீரபாண்டி — வதிலை அன்புச் செல்வன்

(களங்கப்படுத்தினாலும் சரித்திரம் சரித்திரம்தான். ஆர்.)

● நியூஸ் ஜூஸில் சஞ்சய் காந்திக்கு தபால் தலை வெளியிட்டது நியாயப்படுத்தப்பட்டுள்ளதே....
செங்கவல்லி — கி. முருகவேள்.

(கொஞ்சம் கவனமாகப் படியுங்கள்! அந்த அபசாரத்தை நாம் செய்யவில்லை' ஆர்.)

● ராஜராஜன் கிணற்றில் என்ன இருக்கிறது என்று சரியாக எழுதிய ஏழு பேர்களில் நான்குபேர் பொள்ளாச்சிக்காரர்கள் என்பதைக் கவனிக்கும்போது பொள்ளாச்சிக்குப் பக்கத்தில் ஏதாவது ராஜராஜன் கிணறு இருக்குமோ?
திருநெல்வேலி — பாரத்வாஜன்

● பொதுமக்கள் ரசனைக்கே மதிப்புக் கொடுக்காத டீ.வி.க்காரர்களா உங்களுக்குப் பூரண ஒத்துழைப்புக் கொடுப்பார்கள்? விட்டுத் தள்ளுங்கள் சார்.
கலமருதூர் — எம். ரமணி

● டீ.வி. சினிமா விமர்சனப் பகுதியை இவ்வாரம் நிறுத்திய நீங்கள், தடங்கலுக்கு வருந்துகிறோம் என டீ.வி. பாணியிலேயே கூறியிருக்கலாமே!
சங்கரன்கோயில் — என். குருநாதன்

● 'ம்மாடியோவ்' பகுதியில் அனிதா ராமச்சந்திரன் கூறுவது போல் பத்து வருஷமாகத் தொடரும் 'No sex please, we are British' ஒரு நகைச்சுவைப் படம் அல்ல. ஒரு நகைச்சுவை நாடகம். பெயரில்தான் செக்ஸ் இருக்கிறதே ஒழிய நாடகத்தில் ஆடை குறைப்புக் காட்சி எதுவும் கிடையாது. தவறுதலாக ஆபாசப் புத்தகங்களை வரவழைத்த பாங்க் மானேஜர் இல்லத்தில் நடக்கும் சம்பவங்களைப் பற்றிய நகைச்சுவை நாடகம்.
கோடம்பாக்கம் — ராஜேஸ்வரி சாம்பமூர்த்தி

# Kalki Shopping Page

தமிழ்நாடு மின்சார வாரியத்தில் தலைமை என்ஜினியராய்ப் பணியாற்றும் திரு கே.எம். பாலிகா, கொங்கிணி மொழி, கொங்கிணியர் கலாசாரம், கொங்கிணி திரை உலகம், இவை பற்றிப் பல சுவையான தகவல்களைச் சொன்னார்:



# பாலிகா

## பேசுகிறார்!

கொங்கிணி — இது எழுத்து வடிவம் இல்லாமல், ஒலி வடிவம் மட்டுமே கொண்ட ஒரு மொழி. கோவாவின் சில பகுதிகள், கொச்சி, ஹொனாபீடு, வடக்கு, தெற்கு கர்நாடகா ஆகிய பிரதேசங்களில் கொங்கிணியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் அதிகம் உள்ளனர். அங்கிருந்து வந்து தமிழகத்தின் சென்னை, சேலம், கோயமுத்தூர் நகரங்களில் வாழ்பவர்கள் பலர்.

கொங்கிணி மொழிக்கு எழுத்து வடிவம் இல்லையாதலால், கொங்கிணி ஒலிக்கு கோவாவில் வாழும் கொங்கிணியர், மராத்திய எழுத்துக்களையும், கர்நாடகாவில் வாழும் கொங்கிணியர் கன்னட எழுத்துக்களையும், கொச்சி வாழ் கொங்கிணியர் மலையாள எழுத்துக்களையும் பயன்படுத்துகின்றனர்.

கொங்கிணியரில் கல்வி அறிவுடையோர் எண்ணிக்கை மிக அதிகம். எழுதப் படிக்கத் தெரிந்தவர் 95 சதவீதம் என்றால் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்.

இவர்களுக்கு விவசாயம் தெரியாது. பிரதான தொழில் பாங்கிங்தான். தற்போதுள்ள தேசியமயமாக்கப்பட்டுள்ள பாங்க்களில் கனரா பாங்க், கார்ப்பரேஷன் பாங்க், சிண்டிகேட் பாங்க் மூன்றின் ஸ்தாபகர்களும் கொங்கிணியர்களே.

இவர்கள் பூர்வீக வைணவர்கள். வெங்கடேஸ்வரரும், பண்டரிபுரத்துப் பாண்டுரங்கனும் இவர்கள் வணக்கத்துக்குரிய கடவுள்கள். தவிர ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் தனித் தனிக் குலதெய்வம் உண்டு.

மங்களூரிலிருந்து ''பஞ்ச் கடாயி'' என்ற கொங்கிணி மாதப்பத்திரிகை வெளியாகிறது. ஆசிரியர் **பி. வி.** பாலிகா. கன்னட எழுத்துக்கள் பயன்படுத்தப்படுகின்றன.

கொங்கிணியர் தீபாவளி, துளசி பூஜை, கோபூஜை, நாக பூஜை, விநாயக சதுர்த்தி, யுகாதி, கார்த்திகை போன்ற பண்டிகைகளைக் கொண்டாடுகின்றனர்.

எழுத்தில் இலக்கியங்கள் இல்லை எனினும், பரம்பரையாகச் செவி வழியாகவே வரும் 'ஜானபத கதைகள்' கொங்கிணியில் பல உண்டு.

பிரபல கன்னட நடிகர் கிரீஷ் கர்னாடின் தாய்மொழி கொங்கிணி. இதுவரை இரண்டு கொங்கிணி மொழித் திரைப்படங்கள் வெளியாகியுள்ளன. முதல் படம் ''தபஸ்வினி''. இரண்டாவது படம் ''ஜனமன''. கொங்கிணி இனத்தவரின் மொழி, மற்றும் கலாச்சார வளர்ச்சிக்கென தயாரிக்கப்பட்ட இவ்விரு படங்களின் தயாரிப்பாளரும், டைரக்டரும் மைசூரைச் சேர்ந்த இருபத்தெட்டு வயது இளைஞரான ரமேஷ் காமத். பூனா ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் டைரக்ஷன் துறைப் பட்டதாரி இவர். படத்தின் வசன கர்த்தா 'பஞ்ச் கடாயி' பத்திரிகை ஆசிரியர் பாலிகா. வசனங்களைக் கன்னடத்தில் எழுதி கொங்கிணியில் பேசச் செய்துள்ளார். படங்களில் கொங்கிணியில் பாடல்களுமுண்டு. நடித்துள்ள நடிக, நடிகையர் அனைவருமே கொங்கிணியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். பணக்கார இளைஞன், ஏழைப் பெண்ணைக் காதலிப்பது 'ஜனமன' படக் கதை. படங்களில் சாதிக் கொடுமை, வரதட்சிணைக் கொடுமை, குடிப்பழக்கம் போன்ற சமுதாயப் பிரச்னைகளை அலசுகிறார்கள்.

பேட்டி : எஸ். சந்திரமௌலி



ஜனார்தன் நாயக் —
✱ 'ஜன மன' கொங்கிணி மொழி திரைப் படத்தில் ஒரு காட்சி

# மறக்க முடியாத நபர்!

## கருத்து பதில்கள்

○ பம்பாபதி, கருங்குழி

கே. மறக்க முடியாத நபர் என்று யாரைக் கருதுகிறீர்கள்?

ப: சுமார் ஆயிரம் பேர் பணியாற்றும் ஒரு அரசாங்க அலுவலகத்தின் தலைமை அதிகாரி. இவர் பிராமணர். இவருக்கு ஒரு தனி பியூன் உண்டு. அவர் கிறிஸ்தவர். அந்த அதிகாரி தம் மகளைத் தம் பியூனுக்கே திருமணம் செய்து வைத்தார். ஆபீஸில் பியூன், வீட்டில் மாப்பிள்ளை. இவரது துணிவும் முற்போக்கும் என்றைக்கும் எனக்கு வியப்பு ஏற்படுத்துகிறது. ஒரு விதத்தில் இவர் மறக்க முடியாத நபர்!




○ வி. சாந்தா, மதுரை

கே. 'மார்ரே' ராஜும் வெளியிட்ட சங்க இலக்கியங்கள் இப்போது மறுபதிப்பாக வந்துள்ளனவே, வாங்கினீர்களா?

ப. முதல் பதிப்புப் பிரதிகள் என்னிடம் உள்ளன. இருந்தும் மறு பதிப்புக்களையும் வாங்கினேன். இந்த முயற்சிக்கு ஆதரவும் ஊக்கமும் தரப்பட வேண்டும் என்பதற்காக. ஆமாம், நீங்கள் வாங்கினீர்களா?

○ திருஞ: டி. வி. பொன்னகர் (திருச்சி)

கே: தியேட்டரில் பக்கத்து சீட்டில் அமர்ந்து கொண்டு ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறார்களே அவர்களிடமிருந்து தப்புவது எப்படி?

ப: அடப் பாவமே! அன்று திருச்சியில் என்பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் நீங்கள் தானா? என் அனுதாபங்கள்! எனக்கு அம்மாதிரி பிரச்னையே கிடையாது. ஆகவே உங்களுக்கு உபாயம் சொல்ல இயலாதவனாக இருக்கிறேன்.




○ பி. ஜே.. ரத்தன், தஞ்சாவூர்

கே: கிருபானந்த வாரியார் அவர்களின் மௌன விரதம் வரவேற்கத் தக்கதா?

ப: ஒருவிதத்தில் 'ஆம்' என்பேன். சமய, பக்தி கருத்துக்களைப் பல வருடங்களாக வாரி வழங்கிக் கொண்டிருக்கும் வாரியார் ஒரு சுனை மாதிரி. சற்று ஓய்வு இருந்தால் தான் சுனையில் நீர் ஊறுகிற மாதிரி பல புதிய கருத்துக்களும் தத்துவங்களும் அவர் சிந்தனைகளில் ஊற்றெடுக்கும்.

○ ஆர். ராகவாச்சாரி, கோரட்டூர்

கே: சிலைகள் பொதுவாக மறைந்த தலைவர்களுக்குத்தான் எடுப்பது வழக்கம். இப்போது உயிருடன் இருப்பவர்களுக்கு எடுக்கிறார்களே அதன் நோக்கமென்ன?

ப: காக்காய்! (காக்கைகள் உட்கார வசதி செய்து கொடுப்பதற்காக என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளாதீர்கள்!)

○ மஞ்சு தேவன், சென்னை-17

கே. கல்யாணப் பந்தியில் நீங்கள் உட்காருவது எங்கு? முதலில், நடுவில், கடைசியில்.

ப: எங்கு இலை இருக்கிறதோ அதற்கு முன்னால்!

○ ராஜீ ராமநாதன், சென்னை–90

கே. எழுத்து சீர்திருத்தத்தைப் பற்றி உங்கள் கருத்து?

ப: மொழியைப் பொறுத்தவரை மாறுதல்களும் சீர்திருத்தங்களும் மக்களால் கொண்டு வரப்பட வேண்டும். அரசாங்க ஆணைகளால் மட்டும் எத்தவித மாறுதல்களும் ஏற்படாது. இங்கிலீஷைப் பொறுத்தவரை இப்படி ஒரு முயற்சியை அமெரிக்க ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் மேற்கொண்டார். சுமார் 300 ஆங்கிலப் பதங்களுக்கு எளிய ஸ்பெல்லிங் முறையை அறிவித்தார். பின்னால் அமெரிக்கா காங்கிரஸ் ஜனாதிபதியின் அறிவிப்பையும் உத்தரவுகளையும் வாபஸ் பெறச் செய்தது. தீவிர எதிர்ப்பாளரான ஒரு பத்திரிகை ஆசிரியர் ''சீர்திருத்த'' பாணியிலேயே காரசாரமான கட்டுரைகள் எழுதினார். சில வரிகளைத் தருகிறேன்: Nuthing escapes Mr. Rucevelt. No subject is tu hi for him to take, nor tu lo for him tu notis.."

▪ தியோடர் ரூஸ்வெல்ட்



பரிசு பெறுபவர்:

பி. ஜே. ரத்தன் தஞ்சாவூர்

(முழு விலாசம் தேவை)

# எனது ராஜினமாவுக்(கு)..... அவசியம் ஏற்படவில்லை — க. சுப்பு

**கேள்வி:**

● தி. மு. க. சார்பில் இயங்கும் தொழிலாளர் முன்னேற்றப் பேரவையின் பொதுச் செயலாளர் பதவியை ராஜினமா செய்யப் போவதாகவும், தி. மு. க.வை விட்டே நீங்கள் விலகிவிடப் போவதாகவும் பத்திரிகைகளில் பலமாகச் செய்தி அடிபடுகிறதே! உண்மை நிலை என்ன?

**க. சுப்பு பதில்:**

● தொழிற் சங்க அமைப்பு, ஒரு கட்சியின் சார்பாக இயங்கி வந்தாலும், சுதந்திரமாகச் செயல்படும் அதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். கம்யூனிஸ்ட் கட்சிகளின் சார்பில் இயங்கும் தொழிற் சங்கங்கள், கட்சியின் அரசியல் தட்ப வெட்ப நிலைகளினுல் பாதிக்கப்படாமல் சுயமாக இயங்கி வருகின்றன. ஆனுல் தி. மு. க.விலோ, தொழிலாளர் முன்னேற்றப் பேரவை என்பது கட்சித் தலைமையின் கட்டுப்பாட்டில் இயங்கும் அமைப்பாகத்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தற்போது இந்திரா காங்கிரஸுடன் கூட்டணியாய் இருப்பதால், மத்திய அரசாங்க நிறுவனங்கள் பலவற்றில் நடக்கும் தொழிலாளர்பிரச்னைகளைக் கண்டும் காணுமலும் இருக்க வேண்டிய சூழ்நிலை தி. மு. க. கட்சிக்கு இருக்கிறது. ஆனுல் தி. மு. க. சார்புள்ள தொழிலாளர் பேரவை அவ்வாறு இருக்க முடியாது. இந்தச் சூழ்நிலையில் தொழிலாளர் பேரவை ஒரு முடிவு எடுக்கும்போது, அது விரும்பத் தகாத விளைவுகளை உருவாக்குகிறது.

தொழிலாளர் பேரவைக்கு குப்புசாமி என்பவர் தலைவராக உள்ளார். ஆனுல் விதிப்படி எல்லாவற்றையும் செயல்படுத்தும் பொறுப்பு பொதுச் செயலாளருக்குத்தான். தலைவர் பதவி வெறும் அலங்காரப் பதவியே. குப்புசாமி எப்போதும் கட்சியின் சட்ட மன்ற அலுவலகத்திலேயே இருப்பதால், கலைஞருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றவர். பாண்டிச்சேரி பொதுக் குழு நடந்த பிறகு என்னைத் தனிமைப்படுத்தி, தொழிலாளர் முன்னேற்றப் பேரவையை விட்டு விலக்க அவர் படாத பாடு பட்டுக் கொண்டிருக்கிறர். பொதுச் செயலாளரான என்னைக் கலந்தாலோசிக்காமல், தன்னிச்சையாக முடிவு எடுத்து, தொழிலாளர் பேரவை அதை ஏற்று நடத்த வேண்டும் என்று கூறுகிறர். ''எங்களை ஏன் கலந்து ஆலோசிக்கவில்லை'' என்று கேட்டால் ''இது தலைவர் எடுத்த முடிவு'' என்று கூறி, எனக்கும் கலைஞருக்கும் விரோதத்தை வளர்க்க முயற்சி செய்கிறர்.

பின்னி ஆலைப் பிரச்னை சமயம் ''முழு அடைப்பு'' நடந்தபோது எங்களைக் கலந்து ஆலோசிக்கவில்லை. சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களைப் போராட்டம் நடத்தத் தூண்டிவிட்டு, பிறகு தொழிலாளர்கள் வேலை இழந்தபோது, ''தொழிலாளர் பேரவை என்னசெய்கிறது?'' என்றகேள்வியை எழுப்பினுர்கள் இந்தக் குப்புசாமி கூட்டத்தினர்.



க. சுப்பு

சட்ட மன்ற அலுவலகத்திலேயே டைப் செய்து எனக்கு எதிராகச் சுற்றறிக்கை விட்டார்கள். சென்னை, அசோக் லேலண்ட், இங்கிலீஷ் எலெக்ட்ரிகல்ஸ், இம்பீரியல் டொபாக்கோ, போன்ற தொழிற்சாலைகளில் நடந்த தேர்தல்களில் தி. மு. க.வின் சார்பில் நின்ற வேட்பாளர்கள் தோல்வி யடைந்ததற்குக் காரணம், கட்சித் தலைமை தொழிலாளர் பேரவையைக் கலந்து ஆலோசிக்காமல், சுயேச்சையாகச் செயல்பட்டது தான்.

நான் பொதுச் செயலாளராக வந்த பிறகு கேரளா, மகாராஷ்டிரா ஆகிய மாநிலங்களில் பேரவையின் கிளைகளை அமைத்துள்ளேன். இது பற்றி, கட்சிப் பத்திரிகையாகக் கருதப்படும் பத்திரிகையில் ஒரு வரி கூடப் போடவில்லை.

இந்த மாதிரியான விஷயங்கள் நடந்து கொண்டிருந்தாலும், என்னைப் பொறுத்த வரை கட்சித் தலைமையிடம் மிகுந்த மரியாதை வைத்துள்ளேன். ஒரு புதிய வேகத்துடனும், பலத்துடனும், எங்கள் உறுப்பினர்கள் செயல்படத் தொடங்கி யிருக்கிறர்கள். இந்தச் சூழ்நிலையில், தி. மு. க.விலிருந்தோ, அல்லது தொழிலாளர் முன்னேற்றப் பேரவையிலிருந்தோ நான் ராஜினமாச் செய்ய வேண்டிய அவசியம் தற்போது ஏற்படவில்லை. பேட்டி : ப்ரியன்

# இசை வளர்த்த பாரதி

சேக்கிழார் படைத்துள்ள திருத்தொண்டர் புராணத்திலே, தம்மைப் பாடுமாறு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சிவபெருமான் ஆணையிடுகிறார். அப்போது, "அர்ச்சனை பாட்டேயாகும்; ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்கிறார் சிவபெருமான். இதனால் அர்ச்சனை என்பது முணு முணுக்கும் மந்திரமல்ல; இசையோடு கூடிய பாட்டுத்தான் என்பது புலனாகிறது.

இறைவன் தனக்கு சம்ஸ்கிருதம் தெரியாதென்றா, 'தமிழில் பாடு' என்று சொன்னார்?

"சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" என்கிறாரே சேக்கிழார். "தூய மறை" என்பது வேதங்களையே குறிக்கும். அவற்றைப் பாடியவர் இறைவன் தானே! அவரே சொன்னார் 'தமிழில் பாடு' என்று. ஏன்? பக்தனுக்குப் புரிய வேண்டும் என்பதற்காகத்தான்.

கட்டுரை ஒன்றிலே பாரதியார் "கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் தமது சொந்த வசனத்தைச் சொல்லி, இறைவனை வழிபட வேண்டும்" என்று சொல்கிறார். இராமலிங்க சுவாமிகளும் இதையே சொன்னார். இதிலிருந்து என்ன தெரிகிறது? கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் தம் ஐம்புலன்களும் ஒன்றுபடும் வகையில் இறைவனை வழிபட வேண்டுமென்றால், தங்கள் தாய் மொழியில்தான் அது முடியும் என்பதல்லவா!



சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு என்று நினைக்கிறேன். ரோம் நகரில் உள்ள வாடிகன் கவுன்சில் கூடி, ஒரு சர்ச் எந்த மொழிப் பிரதேசத்தில் இருக்கிறதோ, அந்த மொழியிலே அர்ச்சனை வழிபாடு நடத்த அனுமதி தந்தது. ஆனால் பீஜ மந்திரம் மட்டும் சமய மொழியான லத்தீனில் சொல்லப்பட வேண்டும் என்று வாடிகன் கவுன்சில் ஆணை பிறப்பித்தது.

அர்ச்சனையிலே சம்ஸ்கிருதத்திலிருந்து தமிழுக்கு மாறுவதற்கு மேல் மட்டத்திலிருந்து ஆணை பிறக்க வழியில்லை. மடம் அல்லது மடாதிபதி பிறப்பிக்கலாம். ஆனால், இந்துக்கள் மத்தியிலே ஒரே மடம் இல்லை. எத்தனையோ மடங்கள் இருக்கின்றன.

அவசரம் காட்டத் தேவையில்லை. வெகு விரைவில் ஆலயந்தோறும் தமிழே அர்ச்சனை மொழியாகும்.

பாரதியார், வட மொழியில் உள்ள வேதங்கள் கூட தமிழில் வந்துவிட வேண்டும் என்றார். "தமிழில் பழமறைகள் பாடுவோம்" என்பது அவரது வாக்கு. "மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம்" என்றும் பாடினார். அவரை விடவா தமிழ் அர்ச்சனையை வெறுப்பவர்கள் பெரியவர்கள்?

தன் பாடல்களையோ, பிறர் பாடல்களையோ பாரதி பாடுங்கால், அதன் பொருள் தோன்றும்படியாக அபிநயம் செய்வாராம். கப்பலோட்டிய தமிழர், 'வ.உ.சி. கண்ட பாரதி' என்ற நூலிலே புதுவையில் பாரதியாரைச் சந்தித்துத் தாம் உரையாடியதைக் கூறுமிடத்து,

"பாரதியாருடன் தங்கி அடிசில் உண்டும் ஆவிநீர் குடித்தும், அவரது ஆடல் பாடல்களைக் கண்டும் கேட்டும் அகமகிழ்ந்து சின்னாள் கழித்தேன்."

என்று கூறுகிறார்.

பாரதியாரின் அருமை மகள் சகுந்தலா பாரதியும், தமது தந்தையார் பாடுங்கால், நாடக அபிநயத்தையும் கடைப்பிடிப்பதுண்டு என்கிறார். அவர், "என் தந்தை" என்ற தமது நூலிலே,

"பரத நாட்டியத்தில் என் தந்தை மிக்க ஆவல் கொண்டவர். கோபால கிருஷ்ண பாரதியாரின் 'ஆனந்த நடனம்' என்ற பாடலை அவர் அடிக்கடி பாடிப் பரவசமடைவார். 'தக தக தக தக வென்றாடோமோ' முதலிய பாட்டுக்களிலே அவர் மனத்தில் ததும்பிய நாட்டிய பரவசத்தின் மேன்மை வெளியாகின்றது" என்கிறார்.

பாரதியாருக்கு இசை ஞானம் உண்டு. அதிலே சாத்திர ஞானமு முண்டு; சரித்திர ஞானமுமுண்டு. அதனால் தம்முடைய இசைப் பாடல் ஒவ்வொன்றுக்கு முரிய ராகத்தையும் தாளத்தையும் அவரே குறித்து வைத்துள்ளார். "சங்கீத விஷயம்" என்னும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரை ஒன்றிலே சங்கீத சாத்திரத்திலும் சரித்திரத்திலும் அவருக்குள்ள பூரண ஞானம் புலனாகிறது.

இறைவன் நாதப் பிரம்மமாக இருக்கின்றான் என்பது நம்முடைய முன்னோர்களின் கொள்கை. அவனை நாதத்தின் மூலமும் வழிபட முடியும். அதற்கு "நாதோபாசனை" என்று பெயர்.

இறைவன் நாத வடிவானவன் என்பதனை, "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்ற தேவார வாசகத்தாலும் அறிகிறோம். முருகனடியாரான அருணகிரிநாதரும், 'நாத விந்துகலாதி நமோ நம' என்றதும் நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

பாரதியார், இசைப் பாடல்களை ஏராளமாகப் பாடியுள்ளார். 'கண்ணன் பாட்டு' என்னும் தலைப்பில் அவன் புனைந்துள்ள பாடல்களெல்லாம் ராகத்தோடும் தாளத்தோடும் சாஸ்திரோக்தமாகப் பாடக் கூடிய இசைப் பாடல்களே.

ம.பொ.சி

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யா பவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

REGISTERED No. M.
Registered as a Newspaper in

# கொஞ்சும் அழகி, கோகுல் குமரி!

கோடைக்குகந்த,
தூய சந்தனத்தில் தயாரான
ஒரே உன்னத தயாரிப்பு

## கோகுல்
## ஸாண்டால் &
## ஸாண்டல்வுட்
## பவுடர்கள்



தயாரிப்பாளர்கள்:
டி.எஸ்.ஆர். & கம்பெனி,
மதராஸ்.







ADWAVE/TSR/1030